


குன்றத்தூரில் தெய்வச் சேக்கிழார் விழா 21.5.2001 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. அறநிலையத் துறையின் கூடுதல் ஆணையாளர் திருமிகு எஸ். கனகையா, பி.எஸ்.சி., பி.எல். அவர்களின் தலைமையில் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தொண்டை மண்டல ஆதீனம் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம், ''திருக்கோயில்'' இதழாசிரியர் முனைவர் த. அமிர்தலிங்கம் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் பங்குகொண்டனர். சென்னை இணை ஆணையாளர் திருமிகு இரா. சுப்பிரமணியன், பி.ஏ.பி.எல். அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். காஞ்சிபுரம் உதவி ஆணையாளர் திருமிகு பி. வாசுநாதன், எம்.ஏ., பி.எல்., சேக்கிழார் சுவாமி திருக்கோயில் செயல் அலுவலர் திரு இரா. ரகுநாதன் ஆகியோர் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்து இருந்தார்கள்.



# திருக்கோயில்

திங்கள் இதழ்




| | | |
|---|---|---|
| தனி இதழ் | : | ரூ. 5.00 |
| ஆண்டு உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 60.00 |
| ஆயுள் உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 500.00 |

| மாலை | திருவள்ளுவர் ஆண்டு 2033 | விசு - வைகாசி | மணி |
|---|---|---|---|
| 43 | | ஜூன் 2001 | 6 |




**முகப்பு**

**திருவாலங்காடு அருள்மிகு வடஆரண்யேசுவரர் திருக்கோயில் முகப்பு**

## பொருளடக்கம்




உறுப்பினர் கட்டணம் அனுப்ப வேண்டிய முகவரி :

உயர்திரு ஆணையாளர் அவர்கள்

***திருக்கோயில்***

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை

*119, உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.*

தொலைபேசி : *8279407*






# தெய்வச் சேக்கிழார் அருள் வரலாறு

- முனைவர் த. அமிர்தலிங்கம்

புண்ணிய பூமியாம் நம் தமிழகத்தில் ஆயிரக் கணக்கான கவிஞர்கள் தோன்றி வாழ்ந்து சிறப் புற்றிருந்தாலும் இரண்டு சான்றோர்களைத் தாம் தெய்வப்புலவர்களாக நாம் மதித்துப் போற்றி வரு கிறோம். ''உலகப் பொது மறை'' எனப் போற்றப் படும் திருக்குறளைத் தந்த திருவள்ளுவரை ''தெய்வப் புலவர்'' என்று வாழ்த்துகிறோம். சைவத் திருமுறைகளில் பன்னிரண்டாம் திருமுறை யாக விளங்கும் திருத் தொண்டர் புராணத்தையரு ளிய சேக்கிழார் பெருமானை நாம் ''தெய்வச் சேக்கிழார்'' என்று போற்றுகிறோம்.

தெய்வச் சேக்கிழார் தாம் செய்த தெய்வக் காவியத்திற்குத் ''திருத் தொண்டர் புராணம்'' என்று தான் பெயர் கொடுத்தார். ஆனால் இன்றைக்கு அத்திருத் தொண்டர் புராணத்தின் பெருமை கருதி வையகம் ''பெரிய புராணம்'' என்றே அதை வழங்கி வரக் காண்கின்றோம்.

''பெரிய புராணம்'' என்றால் தமிழ் மொழி யில் தோன்றிய காவியங்கள் அனைத்திலும் அள வால் - எண்ணிக்கையால் பெரியது என்பது பொருள் இல்லை. அளவால் இதைக் காட்டிலும் பெரிய காவியங்கள் உள்ளன. ஆனால் சிறப்பால் - எடுத்து சொல்லும் பொருளால் திருத்தொண்டர் புராணத்தை விடப் பெரியதாக ஒரு காவியமோ நூலோ இல்லை. அதனால் தான் தெய்வச் சேக்கிழார் அருளிய தெய்வக்காவியத்தை அதன் பெருமை கருதி ''பெரிய புராணம்'' என்று இன்றைக்கு நாம் போற்றிக் கொண்டிருக்கிறோம்.

ஒரு முறை ஔவையாரிடத்தில் முருகப் பெருமான் பெரியது எது என்று வினவியபோது ஔவையாரும் உலகிலே பெரியது இதுதான் என்று தெளிவு படுத்திப் பாடியதாக ஒரு பாட்லும் நாம் பெற்றிருக்கிறோம். உலகம் மிகப் பெரியதுதான். ஆனால் உலகத்தைப் படைத்தவன் ஆதலால் நான்முகன் பெரியவன், நான்முகனோ கரியமால் உந்தியில் வந்தோன். ஆகவே திருமால் பெரியவர், திருமாலும் பாற்கடலில் துயின்று கொண்டிருப்ப தால் கடல் பெரியது, அக்கடலை அங்கையால் அள்ளிக் குடித்த அகத்தியர் பெரியவர், அகத்தியர் ஒரு கலசத்தில் பிறந்தவர், ஆகவே அக்கலசம் உண்டான இம்மண் பெரியது, இம்மண்ணை ஒரு தலையால் தாங்கிக் கொண்டிருப்பவனான ஆதிசேடன் பெரியவன், ஆதிசேடனையும் தன் ஒரு விரல் மோதிரமாக அணிந் திருக்கும் உமா தேவி பெரியவர், உமா தேவியை ஒரு பாகமாகக் கொண்டிருக்கும் இறைவரே பெரியவர், அவ்விறைவரும் தொண்டர்கள் உள் ளத்திற்குள் அடங்கி விடுவதால் ''தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே'' என்று ஔவையார் உலகிலேயே மிகப் பெரியது தொண்டர்களுடைய பெருமை தான் என்று தெளிவு படுத்திப் பாடியிருக் கிறார். அத்தகைய தொண்டர்களின் - இறையடியார் களின் சிறப்பினைப் பாடும் காவியம் என்பதால் தான் தெய்வச் சேக்கிழாரின் திருத் தொண்டர் புராணம் ''பெரிய புராணம்'' என்று போற்றப்பட்டு வருகிறது.

பெரிய புராணத்தை அருளிய காரணத்தால் தெய்வச் சேக்கிழார் உலகில் ஒப்பற்ற ஒரு பெரும் சான்றோராகத் திகழ்கின்றார். அவரடைய பெருமைக்கு முன் மதுரமான இராமாயண காவியத்தைத் தந்த வால்மீகி முனிவருடைய பெருமையும் ஒப்பாகாது. மகாபாரதத்தைத் தந்த வேத வியாசருடைய பெருமை யும் ஒப்பாகாது, ஆயிரம் நா படைத்த ஆதிசேட னுடைய பெருமையும் ஒப்பாகாது, அகத்திய மாமுனிவருடைய பெருமையும் கூட ஒப்பாகாது என்று சேக்கிழார் புராணம் பாடிய கொற்றவன்குடி உமாபதி சிவம் அவர்கள் பாடியிருப்பதையும் இந்த நல்ல நேரத்திலே நான் எடுத்துக்காட்ட விழை கிறேன்.

''மதுர இராமாயண கதை உரைசெய்த
வான்மீக பகவனும் ஒப்பல்ல
விதிவழி பாரதம் உரை செய்து கரைசெய்த
வேத வியாதனும் ஒப்பல்ல
சிதைவற ஆயிர நாவுடன் அறிவுள
சேட விசேடனும் ஒப்பல்ல
பொதியமலைக் குறுமுனிவனும் ஒப்பல்ல
புகழ் புனைகுன்றை முனிக்கு''

என்பது உமாபதி சிவனார் அருள்வாக்கு.



அத்தகைய ஒப்பேதும் இல்லாத குன்றை முனிவர் எனப் போற்றப்படும் சேக்கிழார் பெருமான் தோன்றிய திருவிடம் குன்றத்தூர். இக்குன்றத்தூரில் வேளாளர் மரபில் சேக்கிழார் குடியில் தோன்றி வாழ்வாங்கு வாழ்ந்த வெள்ளியங்கிரி அழகம்மை தம்பதிகளுக்கு இருமக்கட் செல்வங்கள் பிறந்தார்கள். மூத்தவர் அருள் மொழித் தேவர். இளையவர் பாலறாவாயர். ஆம்! நாடு இன்றைக்கு விழாக் கொண்டாடும் தெய்வச் சேக்கிழாருக்கு அவர்கள் பெற்றோர்கள் வைத்த திருநாமம் அருள்மொழித் தேவர் என்பது. அவரால் சேக்கிழார் குடிக்கு ஏற்பட்ட சிறப்பு காரணமாக அருள்மொழித் தேவர் என்கிற இயற்பெயர் மறைந்து, மற்றபல பட்டப்பெயர்களும் மறைந்து சேக்கிழார் என்ற ஒரு திருப்பெயரே நின்று நிலைத்து வழங்கி வருகிறது.

''தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து'' என்பது ஔவையார் வாக்கு. அன்றைய தொண்டை நன்னாடு 24 கோட்டங்களைக் கொண்டு விளங்கியது. அவ்விருபத்து நான்கு கோட்டங்களில் ஒரு கோட்டமாக புலியூர்க் கோட்டத்தில் சிறந்து விளங்கிய குன்றத்தூரில் தோன்றிய நம் அருள் மொழி தேவரும் இளமையிலேயே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய காரணத்தினால் அநபாயச் சக்கரவர்த்தியாண்ட சோழப் பெருமண்டலத்திற்கு அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அருள்மொழித்தேவர் சோழப் பெரு மண்டலத்தின் அமைச்சர் ஆன அந்த சிறந்த வரலாற்றை கவிச்சக்கரவர்த்தி கம்பர் தாம் எழுதிய ''ஏர்எழுபது'' எனும் நூலிலும் தெரிவித்திருப்பது இங்கே குறிப்பிடத்தக்கது. சோழச் சக்கரவர்த்திக்கு அன்று ஒரு ஐயம் உண்டானது. ''தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து'' என்பது மெய்யான மொழியா? அல்லது புலவர்கள் கட்டி விட்ட கற்பனை மொழியா'' என்பதைச் சக்கரவர்த்தி கண்டறிய விழைந்தான். இதைக் கண்டறிவதற்காக மூன்று கேள்விகளை வினவிப் பறைசாற்றினான்.

மலையைவிடப் பெரியது எது?<br>
கடலை விடப் பெரியது எது?<br>
உலகை விடப் பெரியது எது?

இம்மூன்று வினாக்களுக்குப் பொருத்தமாக விடை தருபவர்க்கு முதலமைச்சர் பதவி தருவதாக அநபாயச்சோழன் அறிவித்தான். பல நாட்டைச் சார்ந்த பல அறிஞர்களும் விடைகளை அளித்தனர். நம் சேக்கிழாரும் மன்னன் வினவிய வினாக்களுக்குத் திருக்குறளாம் தமிழ் மறையிலிருந்தே பொருத்த

மான விடைகளை வழங்கினார். சேக்கிழார் தந்த விடைகள் இவைதான்;

1. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது.

2. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின் நன்மை கடலின் பெரிது

3. காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது.

சேக்கிழார் அளித்த விடைகள் கண்டு மன்னன் மகிழ்ச்சி அடைந்தான். ''தொண்டை நன்னாடு சான்றோருடைத்து'' என்ற மொழி மெய்யான மொழியே என்பதைத் தெளிந்தான். தான் அறிவித்தபடியே தொண்டை நன்னாட்டில் செல்வமலிகுன்றத் தூரில் தோன்றிய சேக்கிழார் பெருமானுக்கு ''உத்தம சோழப் பல்லவர்'' என்ற பட்டப் பெயர் கொடுத்துத் தம் முதலமைச்சராக ஆக்கிக் கொண்டான். கவிச் சக்கரவர்த்திக் கம்பர் - வேளாளர் மரபைப் புகழும் தமது ''ஏர் எழுபது'' எனும் நூலில்

**''மண்ணில் கடலில் மலையில் பெரிதென் என எண்ணி எழுதிக் கொடுத்த ஏற்றக்கை''** என்று சேக்கிழார் திருக்கரங்களைப் போற்றியிருக்கக் காண் கிறோம்.

சேக்கிழார் தம் திருக்கரங்களால் அன்றைக்கு அநபாயச் சோழனுக்கு ஏற்பட்ட ஐயங்களைத் தீர்க்கும் விடைகளை எழுதி அமைச்சர் ஆனார். தாம் அமைச்சரான பிறகு தம் திருக்கரங்களால் எத்தனையோ அறப்பணிகளைச் செய்தார். அவற்றில் தலைமையான ஒன்று குடந்தையிலுள்ள திரு நாகேசுவரர் ஆலயத்தைப் போல் குன்றத்தூரிலும் இன்றும் பெருமையுடன் விளங்கக்கூடிய நாகேஸ்வரர் ஆலயத்தை அமைத்துப் பெருமை கொண்டது ஆகும். சிலருடைய திருக்கரங்கள் கோயிலைக் கட்டிச் சிறப்புக் காணும். சிலருடைய திருக்கரங்கள், காவியம் எழுதிச் சிறப்பினைக் காணும். தம்திருக்கரங்களால் கோயில் கட்டவும் புண்ணியம் செய்தவர் சேக்கிழார். அதே கரங்களால் ''பெரிய புராணம்'' என்னும் காவியம் செய்யவும் புண்ணியம் செய்தவர் சேக்கிழார்.

இம்மை மறுமைக்குப் பயன்படாத சீவக சிந்தாமணி எனும் சமண காவியத்தில் அநபாய மன்னன் ஆர்வம் காட்டிய போது ''தம்முயிர்க்கு உறுதி எண்ணாமல் தலைமகன் வெகுண்ட போதும் வெம்மையைத் தாங்கி நீதிவிடாது நின்றுரைக்கும் வீரரான சேக்கிழார்'' இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தருவது சிவனடியார் திருக் கதைகளே என்று மன்னனிடம் கூறி அவ்வரலாறுகளை எல்லாம் சோழ மன்னன் மனம் கொள்ள எடுத்துரைத்தார்.

சுந்தரமூர்த்தி நாயனார் ''திருத் தொண்டத் தொகை'' எனும் ஒரு பதிகத்தில் நாயன்மார்களின் நல்ல வரலாறுகளை மிகச் சுருக்கமாக எடுத்துரைத் தார். திருமுறைகளைத் தொகுத்தருளிய நம்பியாண்டார் நம்பிகள் நாயன்மார் ஒவ்வொருவரையும் புகழ்ந்து அதைத் திருத் தொண்டர் திருவந்தாதியாகப் பாடி யருளினார். அவ்வரலாறுகளை எல்லாம் மிகச் சிறப்பாகக் கற்றிருந்த சேக்கிழார் சோழச் சக்கரவர்த் திக்கு நயமாகவும் பக்திச் சுவை சொட்டவும் தாம் அறிந்தவாறு எடுத்துக் கூறினார். அவற்றை கேட்ட மன்னன் பெருமகிழ்ச்சி கொண்டு ''உத்தம சோழ பல்லவரே! யான் உங்களால் பெற்ற இவ்வின்பம் உலகமும் பெற வேண்டும். தாங்கள் கூறிய இறையடியார்களின் வரலாறுகளை எல்லாம் காவியமாக வடித்துத்தாருங்கள். இப்போதே தில் லைக்குப் புறப்பட்டு அங்கேயே இக்காவியத்தைச் செய்தருளுங்கள். உங்களுக்கு வேண்டிய அனைத் துதவிகளையும் யான் செய்கிறேன்'' என்று வேண்டிக் கொண்டார்.

சேக்கிழார் தில்லை வந்தார். சிவகங்கையில் நீராடினார். ஆனந்தக் கூத்தனைத் தொழுதுருகினார். ''தில்லையம்பலப் பெருமானே! உம் அருள் பெற்றன்றோ உம்மடியாரைப் பாட வேண்டும். நீரே காவியம் தொடங்க அடி எடுத்து கொடுத்தருளும்'' என்று இறைஞ்சி நின்றார்.

பொன்னம்பலக் கூத்தனும் ''உலகெலாம்'' என்று அடி எடுத்துக் கொடுத்தார். இறையருள் பெற்ற சேக்கிழாரும் விரதம் பூண்டு திருத்தொண்டர் புராணத்தை பாடி முடித்தார்.

''உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்''

என்று ஆரம்பித்து, இரண்டு காண்டங்கள், பதின் மூன்று சருக்கங்கள், மொத்தம் 4253 பாடல்களால் திருத் தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தார் நம் சேக்கிழார்.

சோழச் சக்கரவர்த்தியும் தூதுவர்கள் வாயி லாகத் திருத் தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் பாடி நிறைவு செய்து விட்டார் என்பதை அறிந்தவுடன் தன்பரிவாரங்களுடன் தில்லைக்கு எழுந்தருளினான். சேக்கிழாரை வணங்கிப் போற்றினான். நடராசப் பெருமானையும் தொண்டனிட்டுப் பணிந்தான். அப்போது ''சேக்கிழார் நமது தொண்டர் சீர் பரவ நாம் மகிழ்ந்து ''உலகெலாம்'' என்று அடியெடுத்துக் கொடுத்தோம். அவரும் நூல் செய்து முடித்தார். காக்கும் வேள் வளவ நூலை நீயும் இருந்து கேள்'' என்று அசரீரி எழுந்தது.

தில்லையில் ஆயிரங்கால் மண்டபத்தில் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தை அரங் கேற்றம் செய்தார். திருஞான சம்பந்தர் அவதாரம் செய்த சித்திரைத் திருவாதிரை நாளில் அரங்கேற்றத் தொடங்கி, மறு ஆண்டு சித்திரைத் திருவாதிரை யில் திருத்தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் பெருமான் நிறைவு செய்து முடித்தார்.

கருங்கடலைக் கையினால் நீந்திக் கடந்தா லும் கடந்து விடலாம், கடற்கரையில் உள்ள பொடி மணலை எண்ணினாலும் கூட எண்ணி விடலாம். கடலில் அலைகளையும், மீன்களையும் கூட எண்ணி விடலாம், வானத்து நட்சத்திரங்களையும் கூட எண்ணி விடலாம், ஆனால் சிவபெருமானின் திருவடிகளைத் தம் முடிமேல் சூடிக்கொள்ளக் கூடிய திருத் தொண்டர் பெருமையை அளவிட்டுரைப்பது வானவர்களுக்கும் இயலாத அரிய செயல், அதை எளிதாகச் செய்து முடித்தார் திருத் தொண்டர் சீர் பரவுவாரான நம் சேக்கிழார் பெருமான் என்று போற்றுகிறார் கொற்றவன் குடி உமாபதி சிவனார்.

திசையனைத்தின் பெருமையெலாம் தென் திசையேவென்றேறும் வண்ணம் திருத்தொண்டர் புராணத்தைப்பாடி அரங்கேற்றம் செய்த சேக்கிழார் பெருமானுக்குத் தமிழுலகமும், சமய உலகமும் எத்தகைய கைமாற்றினைச் செய்ய முடியும்? பெரிய புராணச் சுவடிகளையும் சேக்கிழார் பெருமானையும் தம் பட்டத்து யானையின் மேல் ஏற்றிய தில்லையின் மாட வீதிகள் அனைத்திலும் வலம் வரச் செய்து தானும் உடன் ஏறிச் சேக்கிழார் அமர்ந்திருக்க சோழ மாமன்னன் தான் நின்று தன் இரு கைகளாலும் கவரி வீசி ''இது யான்பெற்ற பேறு'' என்று கூறி சேக்கிழா ருக்கு சிறப்பு செய்தது ஒன்றே தெய்வச் சேக்கிழாரின் பெருமையை என்றென்றும் உலகிற்குக் கூறிக் கொண்டே இருக்கும்.

முன்னாளில் ''உத்தமச் சோழ பல்லவர்'' என்று பட்டம் தந்து பெருமை படுத்திய சோழ மாமன்னன் சேக்கிழார் பெரிய புராணத்தை அரங் கேற்றிய பொன்னாளிலும் ''தொண்டர் சீர் பரவு வார்'' என்று பின்னும் ஒரு பட்டம் கொடுத்தான். சேக்கிழார் தில்லையிலே தங்கி வாழ் நாள் முழுவதும் சிவத் தொண்டு செய்துகொண்டிருக்க வேண்டிய வசதிகளை எல்லாம் செய்து தந்து, சேக்கிழாரின் உடன் பிறப்பு பாலறாவாயரையும் தம் அமைச்சராகக் கொண்டான். சேக்கிழார் பெருமானும் தில்லைத் திருத் தலத்திலேயே வாழ்ந்து பொன்னம்பலக் கூத்த னாரின் பொற்பாதங்களை ஒரு வைகாசி பூசத் திரு நாளில் நண்ணினார் என்பதாக அவருடைய அருள் வரலாறு சிறக்கக் காண்கிறோம். சேக்கிழார் இறை யடி நீழலை அடைந்தாலும் அவர் கட்டிய சொற் கோவில் பெரிய புராணம் ''உலகெலாம்'' புகழ் பரப்பி நிற்கிறது. அவர் கட்டிய கற்கோயில் ''வடதிரு நாகேஸ்வரம்'' குன்றத்தூரில் விளங்குகிறது. அவர் பிறந்த திருவீடும் சேக்கிழார் கோவிலாக இவ் வூரில் பெருமைபடத்திகழ்கிறது.

இத்தகைய ''செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் பெருமான் பொன்னார் திருவடிகளைப் பரவிப் போற்றிடுவோமாக!''

தூக்கு சீர்த்திரு தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல வல்லபிரான் எங்கள்
பாக்கியப் பயனாப் பதிகுன்றைவாழ்
சேக்கிழார் அடி சென்னி இருத்துவாம்.

**- மாதவச் சிவஞான மாமுனிவர்**

★★★

# திருத்தொண்டர் திருக்குலம்

– அ. நிறைமதி

சிவபெருமான் திருவடிகளை வழிபட்டுய்யும் நற்பேறுடைய அருளாளர் ஆகிய சிவனடியார்களிடையே குலம் பற்றிய உயர்வு தாழ்வுக்கு இடம் இல்லை. அவர்கள் எல்லோரும் தாம்பிறந்த பண்டைக்குலத்தின் தொடர்பினை அறுத்து இறைவனுக்குத் தொண்டுபட்ட திருக்குலம் ஆகிய தொண்டக் குலத்தினர் ஆவர். அறுபத்து மூவராகிய நாயன்மார்களில் அந்தணர் முதல் புலையர் ஈறாக உள்ள எல்லாக் குலத்தவரும் உள்ளார்கள்.

ஆதிசைவ அந்தணர் நால்வர்

1. புகழ்த்துணை நாயனார்
2. சடையனார்
3. இசை ஞானியார்
4. நம்பியாரூரர்.

வேதியர் பன்னிருவர்

1. குங்குலியக் கலயர்
2. முருகனார்
3. உருத்திரப் பசுபதியார்
4. சண்டேசுவர நாயனார்
5. அப்பூதியடிகள்
6. திரு நீலநக்கர்
7. நமிநந்தியடிகள்
8. திருஞான சம்பந்தர்
9. சோமாசி மாறர்
10. சிறப்புலி நாயனார்
11. கணநாத நாயனார்
12. பூசலார் நாயனார்

மாமாத்திரர் ஒருவர்

1. சிறுத்தொண்ட நாயனார்

முடிவேந்தர் அறுவர்

1. சேரமான் பெருமாள் நாயனார்
2. புகழ்ச் சோழர்
3. நெடுமாறர்
4. இடங்கழியார்
5. மங்கையர்க்கரசியார்
6. கோச்செங்கட் சோழர்

குறுநில மன்னர் ஐவர்

1. மெய்ப்பொருள் நாயனார்
2. கூற்றுவ நாயனார்
3. நரசிங்க முனையரையர்
4. ஐயடிகள் காடவர் கோன்
5. கழற்சிங்க நாயனார்

வணிகர் ஐவர்

1. இயற்பகை நாயனார்
2. அமர்நீதி நாயனார்
3. மூர்த்தி நாயனார்
4. காரைக்கால் அம்மையார்
5. கலிகம்ப நாயனார்

வேளாளர் பதின்மூவர்

1. இளையான்குடி மாறனார்
2. விறல் மிண்டர்
3. மானக் கஞ்சாறர்
4. அரிவாட்டாயர்
5. திருநாவுக்கரசர்
6. ஏயர்கோன் கலிக்காமர்
7. மூர்க்க நாயனார்
8. சாக்கிய நாயனார்
9. சத்தி நாயனார்
10. வாயிலார் நாயனார்
11. முனையடுவார் நாயனார்
12. செருத்துணை நாயனார்
13. கோட்புலி நாயனார்

இடையர் இருவர்

1. திருமூல நாயனார் (கூடுவிட்டு கூடுபாய்ந்து இடையர் உடலுக்குள் புகுந்த சிவஞானி நம் திருமூலர்)
2. ஆனாய நாயனார்

பிறமரபினர்

குயவர் - திருநீலகண்ட நாயனார்
பாணர் - திருநீலகண்ட யாழ்ப்பாணர்
பரதவர் - அதிபத்த நாயனார்
வேடர் - கண்ணப்ப நாயனார்
சான்றார் - ஏனாதிநாத நாயனார்
சாலியார் - நேச நாயனார்
செக்கார் - கலிய நாயனார்
ஏகாலியர் - திருக்குறிப்புத் தொண்டர்
ஊர்ப்புலமை ஆன்றதொழில் தாயத்தார் ஒப்பிலவர்
- திருநாளைப் போவார் நாயனார்

மரபறியாத அடியார்கள் அறுவர்

1. எறிபத்த நாயனார்
2. குலச்சிறை நாயனார்
3. பெருமிழலைக் குறும்ப நாயனார்
4. தண்டியடிகள் நாயனார்
5. கணம்புல்ல நாயனார்
6. காரி நாயனார்.

சிவபெருமானைப்போற்றும் அடியார்கள் எக்குலத்தினர் ஆயினும் அவர்களெல்லாம் ஒப்பில்லாப் பெருமையினர் என்பதையே பெரியபுராணம் ½Yr¬ÖyÔüáy. ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்பதே பெரிய புராணம் உணர்த்தும் ஒப்பற்றநெறி.

பெரியபுராணத்தைப் போற்றுவோம்!

''அன்பே சிவம்'' எனத் தெளிந்து அனைவரும் கூடி ஒன்றாய் வாழ்வோம்.

# முத்தாநதியும் முதுகுன்ற ஈசனும்

- ஆர். மெய்கண்டநாதன், விருத்தாசலம்

நின்று மலர்தூவி இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவார்க்கு, என்றும் இன்பமே

- திருஞானசம்பந்தர்

தில்லை நடராசப்பெருமானை தரிசித்தால் முக்தி என்றும், திருவாரூரில் பிறந்தால் முக்தி என்றும், திருவண்ணாமலையை நினைத்தால் முக்தி என்றும், காசியில் இறந்தால் முக்தி என்றும் சொல்லுவார்கள். ஆனால் விருத்தாசலத்தில் பிறந்தாலோ, நினைத்தாலோ, இறந்தாலோ இங்குள்ள இறைவனை தரிசித்தாலோ முக்தி அடையலாம் என்று திருமுதுகுன்ற சருக்கத்தில் கூற அறியலாம்.

முத்தா நதியுடைய முதுகுன்ற பெருமானைப் பற்றி சருக்கங்கம் சொல்லும் பொழுது, முத்தா நதியை சக்தியாகவும், முதுகுன்ற ஈசனை சிவனாகவும் வழிபட்டு வந்துள்ளனர். ஏராளமான வரலாற்றுச் சான்றுகளும், புராணங்களும் முதுகுன்ற ஈசனையும், முத்தா நதியையும் பற்றி குறிப்பிட்டுள்ளன. வடமொழியில் திருமிகு கிருஷ்ணசாமி அய்யங்காரும், தமிழ் மொழியில் எனது தாத்தா வழக்கறிஞர் திருமிகு ரெங்கசாமி பிள்ளை அவர்களும், முறையே வெளியிட்ட ஞான கூத்தர்சருக்கங்களின் வாயிலாகவும் குமாரதேவர் மடத்தின் சார்பாக வெளியிட்டுள்ள குடமுழுக்கு மலரின் மூலமாகவும் இத்தலத்தின் இறைவனையும் நதியையும் பற்றி தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

மணிமுத்தா நதிக்கரையில் அமைந்துள்ளது தான் திருமுதுகுன்றமாகும். மணிமுத்தா நதியில் நீராடினால் சித்தி பெறுவதுடன் முக்தி கிட்டும் என்பதுடன் இறையருளால் பிணியும் அகலும் என்பர். முத்தா நதியை பார்த்தாலும், பார்ப்போம் என்று மற்றவரிடம் சொன்னாலும் ''திரளான பாவமும்'' தீர்ந்து போய்விடும் எனச் சான்றுகள் கூறுகின்றன.

முத்தா நதியில் அமைந்திட்ட இறைவன் தரைமட்டத்தில் இருந்து ''படிப்படியாக'' அமைக்கப்பட்ட அமைப்பில் குன்றத்தில் இருக்கும் ஈசனாக காட்சி அளிக்கிறார்.

**இதிகாசங்களில் முத்தாநதி பற்றியும், முதுகுன்ற ஈசன் பற்றியும் வரும் அரிய கருத்துகள்:**

கந்த புராணம், பாகவத புராணம், வராக புராணம், மகாசைவ புராணம், திருவண்ணாமலை புராணம் போன்றவற்றில் முத்தா நதியைப்பற்றியும் ஈசனைப் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது.

''தீர்த்தாதிரிநாதன்'' என்று நம்தலத்தின் ஈசனை அகத்தியர் சொல்ல ''ராமன்'' கேட்டதாக இராமாயணத்தின் மூலம் அறியலாம். மகாபாரதத்தில், அர்ச்சுனனுக்கு தீர்த்தயாத்திரையின் போது, முத்தா நதியின் பெருமையை ''ரோமசமகரிஷி'' கூறுவதாக அமைந்துள்ளது. ரமண மகரிஷி ஒரு சுலோகத்தில் ''முதுகுன்ற ஈசனை'' என்று கூறியுள்ளார். கந்த புராணத்தில் ''காசியை விட வீசம் பெரியது'' என்று வழிநடை படலத்தில் சொல்லப்பட்டுள்ளது. விருத்தாசலம் பற்றி இறைவனும் இறைவியும் சொன்னதாக பிரம்ம கைவர்த்த புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. இப்படி பல புராணங்கள் சொல்ல, இந்த நதியில் மூழ்கி ஈசனை தரிசித்தவர்கள் ஏராளம்.

அகத்தியர், கண்ணுவர், காசிபர், வசிட்டர், அத்திரி, போதாயனர், சமதக்கினி, வத்சாசதர்ச்சனர், உரோமசர் முதலிய முனிவர்களும், திருமால், பிரம்மா, இந்திரன், பார்வதி, இலக்குமி, சரஸ்வதி, இந்திராணி முதலிய தேவர்களும், திக்குபாலகர்களும், அட்டவசுகளும், நவகிரகங்களும், பதினாறு உருத்திரர்களும், மற்றும் பலரும், ''அழியாத புகழைத் தரும் ஈசன் முதுகுன்ற ஈசனாவார்'' என்று கூற அறியலாம். இனி முத்தா நதியின் சிறப்பையும், முதுகுன்ற ஈசனின் பெருமையையும் பற்றிக் காண்போம்.

**மணி முத்தாநதி**

இது ஒரு புராதன தேவகங்கை நதியாகும். நதிகளில் புண்ணியமானது. பாவங்களை நீக்குவது, வயது, ஆரோக்கியம், தேகஒளி, கீர்த்தி, வலிமை, இனிமை, அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை அளிக்கும் வல்லமை பெற்றதாகும். இந்த மணி முத்தா நதியில் நீராடினால், அகத்திலும், புறத்திலும் தூய்மையுறுவது திண்ணம். ''திருமுட்டம்''

புராணத்தில் தண்டகா சூரனின் சகோதரியான கிருஷ்ணா என்பவளே முத்தா நதியாக வருபவள் என்று கூற ப்பட்டுள்ளது.

அகத்தியர் மணிமுத்தாற்றில் குளித்தவுடன், ''அசுரர்களிடம் புலால் உணவு உண்ட பாவம்'' நீங்கப்பெற்று தெய்வ ஒளி பெருகியது என்று வர லாறு உள்ளது. நோயாளிகள் தங்களுடைய துயர்தீர அகத்தியரை கேட்டதும் அவர் ''முத்தா நதியில்'' மூழ்கி எழுவதைத் தவிர வேறு வழியில்லை எனக் கூறினார். மணிமுத்தா நதிக்கரையில் ''யாகம் செய் தால்'' சதாசிவ வடிவம் பெறுவார்கள் என்றும், மணிமுத்தா நதியில் மாசி மாதத்தில் மக நட்சத்திரத் தில் நீராடி சுவாமிக்கு அபிஷேகம் செய்தாலும் முத்தா நீரை கும்பத்தில் ஏற்றிக் கொண்டு ஒரு அடி நடந்தாலும் நன்மை பொருந்திய ''அசுவமேத யாகம் செய்த'' பலன் உண்டாகும் என்பர். ஒரு செட்டியார் தம் பிள்ளைகள் ஆறு பேர்களுடன் முத்தா நதியில் நீராடி மாநிழலில் நின்றபொழுது, பிறவி குருடன் ஒருவன் புண்ணிய மடுவில் குளிக்க குருடு நீங்கியது. இறைவன் திருவருளால் கண்களைப் பெற்றேன் முத்தா நதியில் நீங்களும் நீராட வேண்டும் என பிற விக்குருடன் சொன்னதைக் கேட்டு, ஆறு பிள்ளை களும் நீராடி அருள் பெற்றனர். விபசித்து முனிவர் வன்னி மரத்தடியில் தனது ஆபரணங்களை வைத்து விட் முத்தா நதியில் நீராடினார். அன்றிரவு இறைவ னின் திருக்கோலம் கண்டு மகிழ்ச்சியுற்றார். குபேரன் தங்கையும், அவளது தோழிகளும் நகைகளுடன் மணிமுத்தா நதியில் நீராடி, நகைகளை வன்னி மரத்தடியில் வைத்து பின்னர் முதுகுன்றப் பெருமானின் அருளைப் பெற்றனர். ஐந்து வயது ஞானகூத்தர் இறைவன் திருவருளால் உயிர் பெற்று எழுந்து ''முத்தா நதியில்'' நீராடி ஞானகூத்த சிவப் பிரகாச சுவாமிகள் என ஆகி ''விருத்தாசல புராணம்'' ஆக்கி தந்து உள்ளார்.

### சுந்தரர் பொன் பெற்று முத்தாநதியில் போட்ட இடம்

சமயக்குரவர்கள் மூவராலும் இந்நதி பாராட்டப் பெற்றுள்ளது என்றாலும், இத்தலத்துறையும், இறை வனது அருளால் சுந்தரர் தாம் பெற்ற பன்னீராயிரம் பொற் காசுகளை கள்வருக்கு பயந்து முத்தா நதியில் இட்டு திருவாரூர் குளத்தில் கிடைக்க பெற்றதாக கூறும் முழு வரலாறு நம்மைப் பரவசப்படுத்துகிறது. இந்த ''பொன் நிகழ்ச்சி'' முத்தாநதி ஒரு தேவகங்கையாகும் என முன்பே சொல்லியுள்ளதற்கேற்ப அமைந்த நிகழ்ச்சி ஆகும். இந்த தருணத்தில் காசி நிகழ்ச்சியை நினைவு கூற வேண்டி உள்ளது. காசியினில் உள்ள கங்கையில் இட்ட ஒரு எலுமிச்சம் பழம் கங்கை கொண்ட சோழபுரத்து கோயிலில் அமைந்துள்ள சிங்கமுக கிணற்றில் காணப்பட்டதாக சொல்லப்படு கிறது. என்ன ஒற்றுமை கங்கைக்கும் தேவகங்கைக்கும் என சிந்தித்தால் முத்தாநதி சிறப்பு நமக்கு தெரியவரும். ஆக, முத்தா நதியே இவ்வளவு சிறப்பு பெற்றது என் றால் இதில் வீற்றிருக்கும் முதுகுன்ற ஈசனின் அருளாதிக்கம் எத்தனை சிறப்பிற்குரியது என்பதை சிந்தித்து மகிழ்வோமாக!

### எலும்புகளைக் கல்லாக மாற்றிடும் புண்ணியமடு

மணிமுத்தா நதியில் (அம்பாள் சன்னதிக்கு அடுத்த வடபுரம் வாயிலுக்கு நேராக உள்ள பகுதி) உள்ள புண்ணிய மடு சென்னை வியாபாரி ஒருவரால் 1715ல் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டதாக கல் வெட்டு சாட்சியம் அளிக்கின்றது. அப்படிப்பட்ட புண்ணியமடு வில் இறந்துபட்டவர்களின் எலும்புகளை இட்டால், அவையாவும் முதுகுன்ற ஈசன் அருளால் கூழாங்கற் களாக என்புகளை மாற்றிடும் நதியாகும். சுக்கிராச்சாரியர் நீராடி அசுர குருவானார். சித்திர சிகண்டியும் கோசிகனும் நீராடி முனிவரானார்கள். கலிங்கன் நீராடி பேய் வடிவம் நீங்கப்பெற்றான். சுவேத மன்னர் நீராடி பூசித்து நந்திபதம் பெற்றார். நாதசர்மா, அநந்த வர்த்தினி நீராடி சாரூப பதவி பெற்றனர்.

### முதுகுன்ற ஈசன் பெருமை

இத்தலம் முக்தி தலம். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற பெருமைகளைக் கொண்டதும் மூவர் பாடிய தேவாரப் புகழ் பெற்றதும் தான் ''இத்திருமுதுகுன்றம்'' என்கிற விருத்தாசலம் ஆகும். சிவதலங்களான காசி, சிதம்பரம், காளத்தி போன்றே விருத்தாசலமும் சிவபெருமான் வீற்றிருக்கும் தலமாகும். இத்தலத்தில் இறக்கும் உயிர் களுக்கு அதாவது நாய், நரி முதலான மிருகங்களுக்கும், ஈ முதலாகிய பறவைகளுக்கும், இன்ன பிற உயிர்களுக்கும், உயிர் துறக்கும் பொழுது, விருத்தாம்பிகை அம்மை தம்மடியில் வைத்து முந்தானை வீச முதுகுன்றப் பெருமான் அவ்வுயிர் களின் வலது காதில் ''ஐந்தெழுத்து'' மந்திரத்தை உபதேசம் செய்து முக்தி அடையச் செய்து அருள் பாலிக்கின்றார். மணி முத்தா நதிக்கரையில் அமைந்த ''முதுகுன்றம்'' என்பது தான் பழமலை ஆகும். அருள்மிகு திருமலை திருப்பதி வேங்கடமுடையான் திருகல்யாணத்திற்கு ''பழமலைநாதர்'' விஜயம் செய்ததாக 10 சுலோகங்களில் சொல்லப்பட்டுள்ளது. மகாபிரளயம் வந்தபோது அழியாத தலம் என்று ஞானசம்பந்தரும், வாசகரும் இதனை சிறப்பித்துக் கூறுவதைக் கொண்டு அறியலாம்.

## பொற் கிண்ணத்தில் பால் கொடுத்த தலம்

அழுத குழந்தைக்கு ஞானப் பாலூட்டிய தாய் உள்ள தலம் சீர்காழி ஆகும். அழாத குழந்தையான குமாரதேவருக்கு அருள்காட்டி பெரியநாயகி பொற் கிண்ணத்தில் பால் கொடுத்த தலம் தான் இந்த விருத்தா சலம் ஆகும். இந்த திருமுதுகுன்றத்தின் எல்லை ஐந்து காத தூரம் என நூல்கள் தெரிவுபடுத்துகின் றன. இங்குள்ள சிவபெருமான் ''பஞ்சலிங்கங்களில்'' ஒரு பிரதான லிங்கமாக பிரகாசிக்கிறார். இந்த பிரதம லிங்கத்தைச் சுற்றி நான்கு திசைகளிலும் நான்கு லிங்கங்கள் பிரகாசிக்கும் என்று சருக்கத்தில் அமைந் துள்ளது. அப்படி ஒன்று பிரகாசம் செய்வது தான் ஏகநாயகரோ! மற்றொரு லிங்கம் ஊர் கிழக்கில் பூதா மூர் அருகே அமைந்து லிங்கமாக பிரகாசம் செய்கிறது. யார் அறிவார் அந்த அருளாட்சியை! இப்படி அமைந்த முதுகுன்றத்திருக்கோயில் விபசித்து முனிவரால் திருப் பணி செய்யப்பட்டது ஆகும்.

## நமச்சிவாய மந்திரம் முக்திதலம்

ஐந்தெழுத்து மந்திரத்துக்கு மகத்துவம் அளித்து, முக்தி தரும் முதுகுன்றச் சிறப்பு '5' என்பதற்கும் சிறப்பாக அமைந்துள்ளது. ஐந்து தீர்த்தங்கள், ஐந்து பிரகாரங்கள், ஐந்து நந்திகள், ஐந்து கொடிமரங்கள், ஐந்து மூர்த்திகள் என ''ஐந்து''க்கு பெயர் பெற்ற தலமாகும். மற்ற தலங்கள் எல்லாம் தரைமட்டத்தில் இருந்து அதே அளவில் கோவில் அமைந்திருக்கும். ஆனால் முதுகுன்ற பெருமான் அமைந்திருக்கும் திருக்கோலம் படிப்படியாக ஏறி பரமசிவனை மலையில் காண்பது போல் அமைந் துள்ளது. நான்கு பிரகாரங்களும், நான்கு நந்திகளும் மட்டுமே திருக்கோவிலில் உள்ளது. மற்றைய பிர காரம் காலத்தினால் மறைந்ததோ எனத் தெரிய வில்லை. ஆனால் ஒரு நந்தி மட்டும் ஆற்றுக்கு அப்பால் கீழ்புரத்தில் 'நந்தீஸ்வர பெருமானாக' காட்சியளித்து அருளாட்சி செய்து நம்மை ஆனந்தப் படுத்துகிறார்.

## காசியெனும் முதுகுன்றம் - மதிதரிக்கும் பழமலை

பத்து விசேடமான தலங்களான காசியென் னும் விருத்தாசலம், திருநல்லூர், சிவசிதம்பரம் போன்ற தலங்களில் ஐந்து முக்கிய தலங்கள் உண்டு என திருவதிட்டகுடி புராணம் எடுத்து சொல்கின்றது. அந்த ஐந்து தலங்களாக இருப்பவை பெண்ணாடம், திருவற்றத்துரை, சந்திரனை சடையிலே தரித்திருக் கின்ற விருத்தகிரி, சிதம்பரம், வசிஷ்டபுரம் ஆகும் - அதிலும் மூன்று தலங்கள் முக்கியமானவை, அவை சிதம்பரம் திருமுதுகுன்றம், திட்டகுடி என்ற தலங் களென திட்டகுடி புராண தலமுறை சருக்கம் வழி காட்டுகின்றது.

## விபசித்து முனிவர் வழிபட்ட தலம்

பிரம்மன் ஒரு தீர்த்தத்தை இந்த தலத்தில் சிருஷ்டி செய்து, பிரம்ம தீர்த்தமாக அமைத்து, அந்த நீரை எடுத்து வழிபடுமாறு அமைந்த இறைவன் இத்தல ஈசன் ஆவார். அகத்திய முனிவர் அன்போடு அருளாட்சி பெற்ற தலம். விபசித்து முனிவர் முத்தா நதியில் மூழ்கி இரவு திருக்கோயிலில் தங்கியதால் ''அருள்'' கிடைக்கப்பெற்று திருப்பணி செய்யும் பேறு பெற்றார். அவருடைய திருப்பணிக்கு குபேரன் தங்கையின் நகைகள் பெரிதும் உதவியாய் அமைந் தது. குபேரனின் தங்கையின் மூக்கணியை சிச்சுலி பறவை கொத்தி கொண்டு வந்து வன்னிமரத்தில் போட்டது. மரத்தின் நிழலில் அமர்ந்திருந்த விபசித்து முனிவரின் மடியில் விழுந்தது. குபேரன் தங்கை தனது தோழியோடு மூக்கணி பற்றி தெரிந்து கொண்டு, நகைகளை வைக்க வன்னிமரத்தை தேர்வு செய்து, மரத்தினில் வைத்து நீராடி இறைவனது அருள் பெற்றனர். குபேரன் தங்கை மனமகிழ்ந்து, தனது நகைகளை ஆலயத் திருப்பணிக்கென அளித்தார். வன்னிமரம் தான் இந்த முதுகுன்ற ஸ்தலத்தின் விருட்சமாகும். அண்மையில் ''திருச்சி பாரத பாய்லர் தொழிற்சாலையினர்'' வெளியிட்ட மாதாந்திர காலண் டரில் இந்த வன்னிமரம் 2000 ஆண்டுகளுக்கு முற் பட்டது என்றும், காஞ்சியில் உள்ள மாமரம் 3500 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்றும் சொல்லப்பட் டுள்ளது. எனவே, இந்த வன்னிமரம் 2000 ஆண்டு களாக உள்ளது என்பதை அறியலாம்.

## வன்னிமரம் தெரிவிக்கும் செய்திகள்

இப்படிப்பட்ட வன்னிமரத்தில் உள்ள இலை யில் சிறிதளவு உணவு கொடுத்தாலே உணவு கொடுத்தவர் ''சிவலோகம்'' அடைவர் என்று புராணம் கூறுகின்றது. வன்னிமரத்தில் மலரும் மலர் இறை வனுக்கு உகந்ததாக உள்ளது. இந்த வன்னிமரத்தின் இலைகளை திருக்கோயிலின் திருப்பணியின்போது விபசித்து முனிவர் தொழிலாளர்களுக்கு வழங்க அந்த இலைகள் அவர்களின் உழைப்பிற்கேற்றவாறு பொற்காசுகளாக மாறியது என்பது தொடர்ந்து பேசப்பட்டு வரும் மரபுச்செய்தியாகும். முதுகுன்ற ஈசனுக்கு திருப்பணி செய்த விபசித்து முனிவர் நந்திதேவர் மூலம் விண்ணப்பம் செய்ய ''ஈசனும் அம்மையும்'' விபசித்து முனிவருக்கும் நந்தி தேவருக்கும் காட்சியளித்ததாக சருக்கம் கூறுகின்றது. அதை ஒட்டி அமைந்த திருவிழாவே மாசிமகத்

திருவிழாவாகும். இந்த திருவிழாவில் தான் அருளாட்சி செய்த எம்பிரானும், பிராட்டியும் விபசித்து முனி வருக்கும், நந்திதேவருக்கும், 6ஆம் திருநாளில் காட்சியளிப்பதுடன் நமக்கும் அருளாட்சி செய் கின்ற வகையில் திருவீதி உலா வரும் காட்சி அமைந் துள்ளது. விபசித்து முனிவர் விண்ணப்பம் செய்ததால் தான், நமது நந்திதேவர் இங்கு செவிசாய்ந்த நிலையில் இருக்கின்றாரோ என்று எண்ணத்தோன்றுகிறது. முதுகுன்றப் பெருமானை பாடமறுத்துச் சென்ற ''சுந்தரரை'' இறைவன் தடுத்து ஆட்கொண்டு தன்னை பாடவைத்து பன்னீராயிரம் பொன் கொடுத்ததோடு அல்லாமல், மணிமுத்தா நதியில் அவற்றைப்போட்டு திருவாரூர் கமலாலயத்தில் எடுத்துக் கொள் என்று சொல்ல, சுந்தரர் பொன்னை பெற்றுக் கொண்டார் என்பதை திருவாரூர் தல வரலாற்றின் மூலமாகவும் அறியலாம். ஆனால், இறைவன் திருவுள்ளம் அப்படி யிருந்தாலும் மாற்று குறையாத தங்கம் தானா? என சுந்தரர் மனம் அலைபாய்ந்ததை உணர்ந்த இறைவன் நம்பிக்கைக்காக ''தும்பிக்கை நாயகனை'' சாட்சியாக அமைத்து, பொன்னை மாற்றுறைத்து காட்டினார். மேலும் பின்னிட்டு திருவாரூர் கமலாலயத்தில் சுந்தரர் பொன்னை பெற்றுக் கொள்ளவும் உதவி னார். எனவேதான் இந்த திருத்தலத்தில் உள்ள உள்சுற்றுப் பிரகாரத்தில் அமைந்துள்ள விநாயகப் பெருமான் ''மாற்றுறைத்த விநாயகர்'' எனப் பெயர் பெற்று அருளாட்சி செய்து வருகின்றார். இதேபோன்று திருவாரூர் கமலாலயத்திலும் மாற்றுறைத்த விநாயகர் அமர்ந்து அருளாட்சி செய்து வருவதைக் காணலாம்.

## வாழ்வு தந்த வாயில்கள்

முதுகுன்றத்தின் உள்ளே நுழைந்ததும் நுழைவு வாயிலில், செயற்கை நடன சிற்பங்கள் இயற்கை வடிவங்களாக கலையம்சத்துடன் நமக்கு காட்சி அளிக்கின்றன. நான்கு கோபுர வாயில்கள் ''கலை வாழ்வு பெட்டகமாக'' நடன சிற்பங்கள் அமைந்த வைகளாக ''வாழ்வு தந்த வாயில்களாக'' நம்மை வர வேற்கின்றன. உள்ளே நுழைந்தவுடன், நமது கண் ணில் தெரிவது நூற்றுக்கால் மண்டபமாகும். இதில் உள்ள ''குதிரை பூட்டிய ரதம்'' மிகுந்த வேலைப் பாடுடன் அமைந்த சிற்பமாகும். இதுபோன்ற சிற்பம் தேவிகாபுரம் பெரியநாயகி அம்மன் திருக்கோயி லில் அமைந்துள்ளது. இங்குள்ள அம்மையின் பெயரும் பெரியநாயகி என்பது குறிப்பிடத்தக்கது. சிற்பக்கலையில் உயிர் ஊட்டிய சிற்பங்களை குதிரை பூட்டிய ரத மண்டபத்தில் காணலாம்.

## விநாயகப்பெருமானின் 2-வது படைவீடு

திருக்கோயிலின் உள்ளே இடது பக்கத்தில் ''அக்னி தீர்த்தம்'' அமைந்துள்ளது. அடுத்து சென் றால் ''ஆழத்து விநாயகர்'' அருளாட்சி செய்கிறார். விநாயகப் பெருமானுக்கு ஆறுபடை வீடுகள் உள்ளது. அவற்றில் 2-வது படை வீடாக ஆழத்து விநாயகர் 16 படிகள் கீழே இருந்து நம் பழமலை நாதரின் பாதத்தை தரிசிக்க வைப்பதாக அமைந் துள்ளது.

## முதுகுன்ற பெருமானின் மாட்சிமை கோலம்

முதுகுன்ற பெருமானைக்காண வேண்டி நம்மை வரவேற்பது உட்பிரகார நுழைவு வாயில் ஆகும். இது வன்னிமர பிரகாரத்திற்கு நுழையும் வாயிலாக அமைந்துள்ளது. நுழைவு வாயில் கோபுரம் ''கண்டராதித்தச் சோழனால்'' அமைக்கப்பெற்று திருப்பணி செய்யப்பட்டுள்ளது. அடுத்து ''முதுகுன்ற பெருமானின்'' உற்சவமூர்த்தி உமையவளுடன் காட்சி அளிக்கிறார். இங்கே நாள்தோறும் ''ஸ்படிக லிங்கம்'' வழிபாடு செய்யப்பட்டு ''கண்ணாடிப் பழமலைநாதர்'' ஆக அருளாட்சி செய்துவருவதை அனைவரும் அறிவோம். உள்ளே முதுகுன்றப் பெருமானை தரிசித்து வந்ததும் மாற்று உறைத்த விநாயகரும் அவருக்குப் பக்கத்தில் இருக்கும் ''பிந்து மாதவ பெருமாள் திருமாலாக'' நமக்கு காட்சி அளிக்கிறார். இப்படி, சிவன் கோயிலில் திருமால் அமைந்து இருப்பது இந்த திருத்தலத்தின் தனிப் பெருமையாகும். அடுத்து ''குமாரதேவருக்கு'' பால் கொடுத்த பெரியநாயகி அருளாட்சி செய்து நம்மை ஆசீர் வதிக்கும் நிலையில் நின்ற கோலத்தில் அமைந் துள்ளது கண்கொள்ளாக் காட்சியாகும். பெரியநாயகி யின் அருளாட்சியைப் பெற்று வலமாக வந்தால், தென்கிழக்கு மூலையில் ''காலபைரவர்'' காலங்கள் நல்லதாக அமையுமாறு பதினெட்டு கரங்களுடன் காட்சி அளிக்கிறார். ஞாயிறு அன்று ராகு கால வேலையில் வடைமாலை சார்த்தி காலபைரவரை வணங்கினால், அடுத்து அடுத்து வரும் இடர்கள், துன்பங்கள் தூளாய் போய்விடும் என்பது உண்மை யாய் நடந்து வருகின்றது. அடுத்து, நவகிரகங்கள் அமைந்த தனி மண்டபம் - கிரகங்கள் குறை நிவர்த்தி கள் செய்கின்ற நிலையில் அமைந்துள்ளது.

அடுத்து, வன்னிமரமும் அதனுடன் அமைந்த மண்டபமும் அதன் பக்கத்தில் பிரம்ம தீர்த்தமும் அமைந்துள்ளது. இந்த மண்டபத்தில் அகத்தியர், குபேரன் தங்கை, விபசித்து முனிவர் ஆகியோரின் சிலைகள் உள்ளது. வலம் வரும் பொழுது, தென்புரத்தில் ''பஞ்சலிங்கம்'' உள்ளதைக் காண லாம். அதனைத் தொடர்ந்து காமாட்சி அமமன், முருக பெருமான், அண்ணாமலையார் ஆகிய சன்னதிகள் உள்ளது. தொடர்ந்து வந்தால், வடபுற

வாயில் மூலம் ''விருத்தாம்பிகை அம்மன்'' சன்னதியை அடையலாம்.

### சுதர்சன சக்கரங்கள் அமைந்த முருகப்பெருமான்

முதுகுன்ற பெருமானின் கோயிலுக்கும், விருத்தாம்பிகை அம்மன் கோயிலுக்கும் இடையில் அமைந்து உள்ளது 28 சிவலிங்கங்களுடன் உடனுறையும் முருகன் வள்ளி தெய்வானை காட்சியாகும். முருகப்பெருமான் வள்ளி தெய்வானையுடன் நின்ற திருக்கோலக் காட்சியும் 28 சிவலிங்கங்கள் ஆகம விதிப்படி அமையப்பெற்று அனைவராலும் வணங்கப்பட்டு வருவது மிகவும் சிறப்பிற்குரியதாகும். நின்ற திருக்கோலத்தில் உள்ள முருகப்பெருமானின் மேலே ''சுதர்சன சக்கரங்கள்'' அமைந்தது, எல்லா வளமும் கிட்டும் என்பதை நினைவுறுத்துகின்றன. இதுபோல, சுதர்சன சக்கரங்கள் அமைந்திருப்பது சில திருத்தலங்களில் மட்டும் தான் என்பது குறிப்பிடத்தக்கது.

### விருத்தாம்பிகை அருட் கோலம்

அடுத்து, அன்னை விருத்தாம்பிகையின் கோயிலுக்கு நுழையும் முன்பு, மண்டபத்தில் காணப்படும் சிற்பம் நம்மை ஆச்சரியத்தில் மூழ்க வைக்கும். யாளியின் வாயில் உள்ள ''உருண்டை பந்து'' நம்மை பரவசமடையச் செய்கிறது. மேலே வரைந்துள்ள படங்கள் முதுகுன்ற பெருமானின் தோற்றத்தையும், முதுகுன்ற வரலாற்றையும், வழங்கிவரும் கதைகளையும் நினைவு படுத்துகின்றன. விருத்தாம்பிகையின் முன் அமைந்துள்ள ''துவார பாலகர்கள்'' சங்கு சக்கரத்துடன் காணப்படுகின்றனர். விருத்தாம்பிகை அம்மன் அருளாட்சி செய்வது நின்ற திருக்கோலத்திலாகும். பிள்ளைக்கும், கிள்ளைக்கும் பால் கொடுத்த பெரியநாயகி அம்மையின் அருள் நமக்கும் அருள் பாலிக்கும். விருத்தாம்பிகையின் திருவடி மலர்களை ஆராதிப்பவர்கள், வறுமையினால் ஏற்பட்ட துன்பங்கள் நீக்கப்பெறுவார்கள். மற்ற சிவதலங்களில் துர்க்கை அம்மன் சிவன் கோயிலில் ஆட்சி செய்வதாக அமைந்திருக்கும். ஆனால், இந்த முதுகுன்றத்தில் துர்க்கை உமையவளான விருத்தாம்பிகையின் வடக்கு பக்கத்தில் நின்ற கோலத்தில் இருந்து, அருளாட்சி செய்வது சிறப்பு வாய்ந்தது ஆகும்.

### நளனுக்கு முதுகுன்ற முனிவர் அருள்வாக்கு அளித்த இடம்

நளன் சித்தபிரமை பிடித்தவன் போல் இருந்த போது நாரதர் அறிவுரை செய்து, தீர்த்தயாத்திரை, தலயாத்திரை செய்யச் சொன்னார். அதேபோல் நளன் காசி முதல் கன்னியாகுமரி வரை யாத்திரை செய்து வந்தார். மனமாற்றம் ஏற்படாத நிலையில் நம் முதுகுன்ற பெருமானை வணங்கும்போது, ''பரத்துவாச முனிவர்'' நளனை கண்டார். நளமன்னனை ஒன்றரை காத தூரத்தில் உள்ள திருநள்ளாறு என்ற தலத்தில் நீராடினால் பீடைகள் போகும் என உபதேசித்தத் தலம் விருத்தாசலம் என்கிற ''திருமுதுகுன்றம்'' ஆகும்.

### நாதசர்மா அனந்தவர்த்தனிலிங்கம்

அடுத்து விருத்தாம்பிகையின் திருக்கோயிலின் முன்னால் அமைந்துள்ள ''நாதசர்மா'' ''அனந்த வர்த்தினி'' திருக்கோயில்கள் ஆகும். நாதசர்மா, அனந்த வர்த்தினி பூர்வபுண்ணியம் செய்ததன் காரண மாக மார்கழி மாதத்தில் திருவாதிரை மகோற்ச்சவத்தில் முதுகுன்ற ஈசனை வந்து தரிசித்துள்ளார்கள். நாதசர்மா, சுவாமியை தரிசித்துவிட்டு காணிக்கை செலுத்திவிட்டு பிறகு கிரிவலம் வந்துள்ளார். வீதிவலம் வரும் பொழுது, விருத்திகிரீஸ்வரரை இரவு முழுவதும் கண்டு களித்துள்ளார். இந்த இரண்டு பேருக்கும் இந்த தலத்தில் ''முக்தி பதவி'' கிடைத்ததனால், விருத்தாம்பிகை அருகில் இரண்டு சிறிய கோயில்கள் கட்டப்பட்டு, எதிர்எதிராக பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ளது. இதில் அனந்தவர்த்தினி சிவலிங்க வடிவமாக காட்சியளிக்கிறார். இறைவன், இறைவியை மட்டுமல்லாமல், இவர்கள் இருவரையும் வழிபட்டால் தான் முக்திக்கு வழி வகுக்கும் என்று செவிவழிச் செய்தி சொல்கிறது.

இப்படிப்பட்ட முத்தாநதியையும், முதுகுன்ற ஈசனையும் பற்றி படித்தோர், படித்தவர் சொல்லக் கேட்டோர் அத்தனைப் பேருக்கும் முதுகுன்ற ஈசனின் அருள் கிடைக்கப் பிரார்த்திக்கிறேன்.

### இசையில் திளைத்த ஈசன்

இசைக்கும், நாட்டியத்துக்கும் இனிய பெயர் உள்ள ஊர் இவ்வூராகும். இசையைப்பற்றி நினைத்தால், முதுகுன்ற ஈசனின் அருள் கிடைக்கும். இசைக்காகவே வழிமறித்து, சுந்தரரிடம் பொருளை பறித்துப் பின், தேவாரம் கேட்டு, பொன்னளித்து அருள் பாலித்துள்ளார். முத்தமிழுக்கும் முதுகுன்றத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என நான்கு கோபுர வாயில் உள்ள சிற்பங்கள் நமக்கு நன்கு காட்டுகின்றன. முதுகுன்றத்தில் இசைத் தமிழ் போராடச் செய்து வந்துள்ளது என்பது அருணகிரியார் திருப்புகழில் அழகுற சொல்லியுள்ளார். சம்பந்தர், சுந்தரர் பாடல்களில் இசையைப் பற்றிய குறிப்புகள் இருக் கின்றன. ''முரசார் வந்து அதிர, முதுகுன்றம்

அமர்ந்தவனே'' என்ற ஒரு வரியே காலந்தோறும் இசை இங்கே முழங்கப்பட்டு வந்துள்ளது என்பதை தெளிவாக்கு கிறது. அண்மையில் ஈசனை ஆராத்திக்கும் வகையில் ''திருமுதுகுன்றம் இசைசங்கம்'' பௌர்ணமி நாளில் தொடங்கப்பட்டுள்ளது சிறப்பிற்குரியதாகும்.

இயல், இசை, நாடகங்கள் நடத்த மண்டபங் கள் தேவை என்பதை உணர்ந்து தான் என்னவோ பல மண்டபங்கள் இத்தலத்தில் அமைந்துள்ளன. அப்படிப்பட்ட மண்டபங்களை பற்றி உங்கள் சிந் தனைக்கு கொண்டு வருகிறேன்.

### அமைந்த மண்டபங்கள், தீர்த்தங்கள், பிரகாரங்கள்

| | |
|---|---|
| கோபுரவாயிலுக்கு வெளியே - | பதினாறு கால் மண்டபம் |
| கோபுரத்தினைக் கடந்தவுடன்- | கோபுர தீபாராதனை மண்டபம் |
| அடுத்து அமைந்திருப்பது - | ''பெரியநந்தி'' மண்டபம் |
| வடபுறம் அமைந்திருப்பது - | நூற்றுக்கால் மண்டபம் |
| தென்புறம் அமைந்திருப்பது - | விபசித்து முனிவரின் மண்டபம் |
| பெரியநாயகி கோயில் முன்பு - | கொலு மண்டபம் |
| சுவாமி கோயில் முன்பு - | அலங்கார மண்டபம் |
| சுவாமி சன்னதிக்கு முன்னால் அமைந்துள்ளது } - | இசை மண்டபம்<br>மகா மண்டபம் |
| அதனை அடுத்துள்ளது - | ஸ்தாபன மண்டபம் |
| அதனை அடுத்துள்ளது - | இடைச்சுழி மண்டபம் |
| அடுத்து கர்ப்பக் கிரகத்தோடு கூடியது - | அர்த்த மண்டபம் |

தேரோடும் திருசுற்று பிரகாரம், கைலாயப் பிரகாரம், வன்னிமரப் பிரகாரம், அறுபத்து மூவர் பிரகாரம், (உட் பிரகாரம்) போன்ற பிரகாரங்கள். ஐந்தில் நான்கு மட்டும் தற்பொழுது உள்ளது.

அக்னி தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், குபேர தீர்த் தம், சக்கர தீர்த்தம், மணிமுத்தாறு போன்ற தீர்த்தங் களும் உள்ள தலம் இத்தலமாகும்.

கல்வெட்டுகள் பல கிடைத்து, அவை நமக்கு சான்றுகள்பல தந்துள்ளன. கல்வெட்டு ஆராய்ச்சி யாளர்கள் ''முத்தாநதி பற்றியும்'', ''முதுகுன்ற ஈசன்'' அருள் பற்றியும் எடுத்துச் சொல்லியுள்ளார்கள்.

### கேட்டவுடன் அன்னம் கிடைத்த தலம்

இப்படிப்பட்ட முதுகுன்றத்தில் தான், குரு



நமச்சிவாயர் தில்லையினின்று வரும் வழியில் இத்திருமுதுகுன்றத்திற்கு வந்தவர், பசிப்பிணியால் வருந்தி படுத்து உறங்கி விழித்த பின்னர் ''முத்தா நதி சூழும் முதுகுன்ற இறைவனே'' எனத்துவங்கும் பாடலை பாடி அதில் ''கிழவி சோறு கொண்டு வர இயலுமா'' என வினவினார். இப்பாடலைக் கேட்டவுடன் பெரியநாயகி இளமை கோலத்துடன் ''சோறும், நீரும்'' கொண்டு வந்து கொடுத்து அருள் பாலித்தார் என்பது வரலாற்று நிகழ்ச்சியாகும். இச் செய்தி விருத்தாசல புராணத்தில் பெரிதும் பேசப் படுகிறது.

### கனியும் - சிலையும் கலந்த தலம்

வடலூர் அருள் பிரகாச வள்ளலார் 1858 முதல் 1867 வரை கருங்குழியில் தங்கியிருந்த போது திரு முதுகுன்றம் வந்து தரிசித்து பாடல்கள் பாடியுள் ளார். பாடல் எண் 2479ல் கனியும் சிலையும் கலந்த இடம் (கனி - பழம், சிலை - மலை) தான் பழமலை யாய் காட்சியளிக்கிறார் என பாடி நம்மை பரவசப் படுத்தியுள்ளார். பழமலையைக் கிழமலையாய் பகருவ தேன்? என பாடியுள்ளார்.

# திருத்தாண்டகவேந்தர் தாண்டகம்

- மணக்கரை மாணிக்க அம்பலவாணன்

1. திருநீறு ஒளிவீசும் நெற்றி தோன்றும்
திகழ்மேனி பொறி சூலம் இடபம் தோன்றும்
மருள்நீக்கி அருள்சுரக்கும் விழிகள் தோன்றும்
மாசற்ற ஆடைதவழ் மேனி தோன்றும்
திருக்கரத்தே உழவாரம் தோன்றும் தோன்றும்
திருமுடி மேல் நல்லூரெம் பெருமான் இட்ட
திருவடிகள் தடம்பதிந்து தோன்றும் தோன்றும்
திருநாவுக்கரசரடி மருவினார்க்கே.

2. நற்றுணையாய் நாதன் தாள் தோன்றும் தோன்றும்
நாவில் நம சிவயவொலி நாளும் தோன்றும்
கற்றூணே கடல்மிதவை யாகத் தோன்றும்
கருத்தில் திரு ஐந்தெழுத்து பதிந்து தோன்றும்
புற்றரவின் கடுவிடமும் அமுதாய்த் தோன்றும்
புந்தியிலே எந்தைதிருவடிகள் தோன்றும்
நற்றவம் முன் உற்றமுனி ஆமூர் தோன்றல்
நாவரசர் தாண்டகம் சொல் நாவினார்க்கே.

3. விண்ணிலொரு வாய்மையெழுந்(து) அன்பனே நீ
வீங்குபுகழ் நாவரசாய் விண்மண் போற்ற
பண்ணடைவு கொண்டதமிழ்ப் பாவால் எம்மைப்
பாடியிரு என்ற பெருங் கருணை தோன்றும்
எண்ணரிய தொல்சமயம் சைவம் ஓங்கி
ஏறுர்ந்தான் பெரும்புகழே செய்த தகவு
தோன்றும்
தண்டமிழ்த் தாண்டகம் செய்த தகவு தோன்றும்
திருநாவுக் கரசரடி மருவினார்க்கே.

4. நிலைபெறவே நெஞ்சிலொருஎண்ணம் தோன்றில்
நீடுபுகழ் ஆரூர் தாண்டகமே தோன்றும்
அலைகடலில் துரும்பொத்த அல்லல் தோன்றின்
அப்பர்திரு நேரிசையே செப்பத் தோன்றும்
மலையளவு பழவினைகள் மருட்டும் போது
மருள்நீக்கத் திருவிருத்தம் மனத்தே தோன்றும்
தல அடைவு தாண்டகம் செய் சொல்லின் வேந்தர்
திருநாவுக் கரசரடி மருவினார்க்கே.

5. நேற்றிருந்தோர் இன்றில்லை என்ற யாகத்தை
நிலையாமை நெறியுணர்வு நெஞ்சில் தோன்றும்
நேற்றை ஏழு நிலை மாடக்கூடம் இன்று
நிலைகுலைந்து தரைமட்டம் ஆதல் தோன்றும்
நேற்றிருந்த குன்றனைய செல்வம் இன்று
நீரின்மேல் குமிழியென்ற நிலைமை தோன்றும்
தோற்றமுயர் சிவஞானி முற்றும் விட்ட
திருநாவுக் கரசர்மொழி தெளிக நெஞ்சே.

6. மருவு திரு மறைக்காட்டு மணாளர் கோயில்
மறைக்கதவம் தாள் நீக்கிப் புகவே ஓங்கு
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்(டு) அரசர் ஞானக்கன்று
திருவுள்ளம் பற்றஅருள் அரசைப் பிள்ளை
திருக்கதவம் தாள்திறக்கப் பாட வேண்டத்
திருவருளின் துணைவேண்டிப் பாடி நின்ற
திருநாவுக் கரசரடி மருவு நெஞ்சே.

7. எண்படுசொல் குறுந்தொகையாம் பாடல் பத்தால்
எந்தை மனம் கனிந்(து) அருளக் காலம் தாழக்
கண்கலங்கிக் கடைக் காப்புப் பாடி வேண்டக்
கதவுதிறந்(து) அருள்சுரக்கக் களித்துப் பின்னாப்
புண்ணியராம் புகலியர்கோன் பாடல் ஒன்றால்
புனித மறைக் கதவு திருக் காப்புச் செய்யப்
பண்ணுதவப் பெருஞ்செல்வர் ஞானக் கன்றைப்
பரவுதிரு நாவரசைப் பரவு நெஞ்சே.

8. திருக்கதவம் தாள்திறக்கப் பாடப் பாடத்
திருவருள் நோக்(கு) அணுகாத தோற்றம் ஆனால்
திருஞான சம்பந்தர் பாடல் ஒன்றே
திறந்த திருக்கதவு கடைக்காப்புச் செய்ய
வருத்தும் தவக் குறைவெண்ணித் துயிலத் தேடி
வாய்மூரெம் பெருமானே வந்து அன்ப
வருந்தற்க வாய்மூர் வா என முன் செல்ல
வழிநடந்த நாவரசை வாழ்த்து நெஞ்சே.

9. விழலுக்கு நீர்பாய்ச்சி மாய்ந்த தேகம்
வீணருக்கங்(கு) உழைத்துடலம் ஓய்ந்த பின்னர்
அழல்புகவே தகும் பெண்ணாகடத்து வாழும்
ஐயா செஞ்சடைக் கொழுந்தே ஒப்பு வாயேல்
பிழைபொறுத்தென் மேலிடபம் சூலம் பெய்வாய்
பின்னரிந்த உடல் கொண்டுன் கோயில் தொண்டில்
அழல்பட்ட மெழுகென்ன கறைவேன் என்ற
அப்பரடி தப்பாமல் சிரங்கொள் நெஞ்சே.

10. நீரேறு படர்சடையும் பிறையும் தோன்றும்
நேரிசைப்பா ஒன்றுள்ளம் நெகிழ்ந்து பாட
கார்குழலாள் உமைபாகன் கருணை தோன்றும்
கனிவுதரும் திருவிருத்தம் கருதிக் கேட்க
தாரணியில் சிவனுறையும் தலங்கள் தோன்றும்
தல அடைவுத் தாண்டகம்சொல் தகவினர்க்கு
பூரணமாய்ச் சிவஞானம் தோன்றும் தோன்றும்
புகலூர்வாழ் அப்பர்மொழி புகழுவோர்க்கே.

11. பண்ணார்ந்த மொழி உமையாள் பங்கா வாழும்
பசுபதியே பரஞ்சுடரே பாவ நாசா
எண்ணத்தால் மொழியாலிக் காயத் தாலும்
இன்றளவுன் தொண்டியற்றி வாழ்ந்தேன்
கண்டாய்
ஒன்னுள்ளே ஒன்பது வாய் ஒக்க மூடி
உணர்வகல உனை நினையா(து) ஓயும் முன்னே
புண்ணியா உன்னடிக்கீழ் புகுவேன் என்று
புகலூர்வாழ் நாவரசைப் போற்று நெஞ்சே.

திருச்சிற்றம்பலம்

# ஆதிசேடனின் அவதாரங்கள்

- விஷ்ணுதாசன் எஸ். சுந்தரம்

**முன்னுரை**

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயப்படி மஹாவிஷ்ணு 'வியூகம்'' என்ற இரண்டாவது நிலையில் திருப் பாற்கடலில் ஆதிசேடன் என்ற ஆயிரம் தலை பாம்பின்மீது பள்ளிக்கொண்டிருக்கிறார். ஆதிசேடன் மஹாவிஷ்ணுவின் அவதாரங்களின்போது அவரும் அவதாரம் செய்கிறார். அதைப்பற்றி சிறிது காணலாம்.

**பதஞ்சலி**

தில்லை திருச்சித்திர கூடம் என்ற திவ்ய தேசம், மற்றும் சிதம்பர நடராஜர் கோயில் இரண்டும் ஒரே நிலத்தில் அமைந்துள்ளது. சிவனுடைய ஆனந்த தாண்டவத்தைக் காண ஆதிசேடன் பதஞ் சலி என்ற முனிவராக அவதாரம் செய்தார் என்பது புராண வரலாறு.

**லட்சுமணன்**

ஸ்ரீ ராமவதாரதத்தின் போது தசரதன் சுமித்திரையின் மகனாகப் பிறந்து இராமருடன் 14 ஆண்டுகள் வனவாசத்தின் போது பெரிதும் இராம சேவை செய்தவர் லட்சுமணன். ஆதிசேடனின் திரு அவதாரம்தான் லட்சுமணன் என்று இராமாயணக் காவியம் கூறுகிறது.

**பலராமன்**

ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தின் போது வசுதேவர் தேவி ரோகிணியின் மகனாகப் பிறந்து அண்ணன் முறையில் கௌரவிக்கப்பட்டவர் பலராமன். இவர் ஆதிசேடனின் அவதாரம் என்பது ஐதீகம்.

**ராமானுஜர்**

ஸ்ரீ பெரும்புதூரில் கேசவ சோமாயாஜி - காந்திமதி தம்பதிகளின் மகனாகப் பிறந்து 120 ஆண்டு கள் வாழ்ந்து பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் செய்து ஸ்ரீ வைஷ்ணவத்தை பரப்பிய ராமானுஜர் ஆதிசேட னின் அவதாரம் என்பது ஐதீகம்.

ஆதிசேடன் இவ்வாறு அவதாரம் எடுத்தது மட்டுமன்றி பாம்பு உருவநிலையிலேயே பலவகையில் தொண்டுகள் செய்கிறார். இதை பொய்கையாழ்வார் தனது முதல் திருவந்தாதியில் அழகாகக் கூறுகிறார்.

'சென்றால் குடையாம்! இருந்தால் சிங்காசனமாம்!
நின்றால் மரவடியாம்! நீள் கடலுள் என்றும்
புணையாம்! மணிவிளக்காம் பூம்பட்டாம்! புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு''.

**குடை**

ஒருத்தி மகனாய் மதுராவின் சிறைச்சாலை யில் தேவகியிடம் பிறந்து அன்றிரவே கோகுலத்து ஒருத்தி யசோதா மகனாய் வளர வசுதேவர் குழந்தையை தூக்கிச் சென்றார். வழியில் யமுனையைக் கடக்கை யில் பெருமழை. குழந்தை கிருஷ்ணனை எப்படியா வது காக்கவேண்டும் என்பதற்காக குடையாக மாறினார் ஆதிசேடன்.

**சிங்காசனம்**

ஸ்ரீ வைஷ்ணவத்தில் பரம் என்ற முதல் நிலையிலேயே திருப்பரமபதத்திலே ஆதிசேடனே சிங்காசனமாய் தொண்டு செய்ய பரந்தாமன் வீற் றிருக்கின்றார்.

**புணை**

வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்து என்றாள் ஆண்டாள். (திருப்பாவை 6) பொய்கை யாழ்வாரும் 'நீள் கடலுள் என்றும் என்றும் புணை யாம்'' என்றார். கடல் நிறக் கடவுள் எந்தை அரவு அணைத்துயிலுமாக் கண்டு உடல் எனக்கு உருகும்'' என்றார் தொண்டரடிப் பொடியாழ்வார். (திருமாலை 19)

**பட்டர் பிரமாணம்**

கூரத்தாழ்வாருடைய குமாரர் பராசுரபட்டர். சர்வக்ஞர். ஒருநாள் ஒரு சிலர் அவரை சோதிக்க எண்ணி ஒரு குடத்தில் பாம்பையிட்டு மூடிக்கொண்டு வந்து குடத்தினுள் உள்ளது என்ன? என்று பராசுர பட்டரிடம் குடத்திலிருந்த பாம்பை எடுத்து, இதுவா வெண் கொற்றக் குடை? என்று இகழ்வாய் சிரித்த னர். பட்டரோ இதுதான் குடை! ''சென்றால் குடை யாம்'' பாசுரம் படிக்க வில்லையோ? என்று கேட்டார்.

**முடிவுரை**

ஆதிசேடன் மஹாவிஷ்ணுவிற்கு செய்யும் பற்பல தொண்டுகள் பற்றியும் இங்கு சிறிது கண்டோம் ஆயிரம் நாஉடைய ஆதிசேடன் நம்மை எல்லாம் காப்பாராக!

## 1] திருவாரூரில் பிறந்தால் புண்ணியம் [2] காசியில் இறந்தால் புண்ணியம் [3] சிதம்பரத்தைக் கண்டால் புண்ணியம் [4] திருவண்ணாமலையை நினைத்தாலே புண்ணியம்.

- மயிலை சிவஞானஜோதி சிவசக்தி அம்மையார்

ஓம்! ஓம்! ஓம்!
அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப் பெருங் கருணை! அருட்பெருஞ்ஜோதி!

*(1) திருவாரூரில் பிறந்தால் புண்ணியம்!*

திருவிழா ஒன்றில், மேடையில் பேசும்போது, ஒரு அன்பர், திருவாரூரில் பிறந்தால் புண்ணியம். சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரில் பிறந்த எல்லோர்க்கும் அடியேன் என்று பாடியுள்ளார் என்று கூறினார். உடனே சிலர் நான் திருவாரூரில் பிறந்தேன் என்று ஓடிவந்து கூறினர். உடனே எனக்கு உடலில் இறைவன் உணர்வுகளைத் தூண்டி உணர்த்தினார். அதாவது திருவாரூரில் பிறந்தால் புண்ணியம் என்பது என்ன என்பதை இறைவன் உணர்த்தினார். அதைப் பாடலாகப் பாடினேன். ஆறாம் அறிவாம் ஆறாம் நிலையாம் ஞானக்கண்ணே திருவாரூர்.

''ஞானக் கண்ணாம் திருவாரூராம்
ஞான க்ஷேத்திரம் கண்டு - ஞான
ஜோதியில் சிவ குருவைக் கண்டு
நெற்றிக் கண்ணில் முருகன் துணையாக வந்தபின்
தோல்வி என்பதே இல்லை - வெற்றி
பேரின்பம் எல்லை இல்லை''

என்று பாடினேன்.

திருவாரூரில் பிறந்தால் புண்ணியம். திருவாரூரில் பிறந்த அடியவர்க்கு அடியேன் என்றதும், எல்லோரும், நான் திருவாரூரில் பிறந்தேன் நான் திருவாரூரில் பிறந்தேன் என்று கூறி மகிழ்ந்தனர். எது திருவாரூர் என்று விளக்குங்கள் என்றேன். அவர்கள், ஆமாம் அம்மா, திருவாரூரில் பிறந்த அடியார்க்கும் அடியேன் என்று சுந்தரர் கூறியுள்ளார், திருவாரூரில் பிறந்தால் மிகவும் புண்ணியம் அம்மா, என்றனர்.

உடனே அடியேன், நான் ஒன்று கேட்கின்றேன் சொல்லுங்கள். அடியார்கள் யாவருமே திருவாரூரிலேதான் பிறந்தார்களா? மாணிக்கவாசகர் திருவாதவூரில் பிறந்தார். வள்ளலார் வடலூரில் பிறந்தார். திருவள்ளுவர் திருமயிலையில் பிறந்தார். ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தாள். இப்படி எத்தனையோ அடியார்கள் வேறு ஊர்களில் பிறந்து இறைவனின் திருவருளையும் திருவடியையும் அடைந்தனர். அதனால், திருவாரூர் என்பது எது? என்று யோசித்து சொல்லுங்கள் என்றேன். உடனே அவர்கள், அம்மா நீங்களே சொல்லுங்கள். எங்களுக்குப் புரியவில்லை என்றனர். இறைவனருளில் அனுபவ உணர்வாக கூறினேன்.

திருவாரூரில், புல், புழு, பூச்சி, பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் இல்லையா? அவைகள் யாவும் அங்கேயே பிறந்து வளரவில்லையா? என்றேன். எல்லாமே உண்டு, ஆமாம் என்றனர். அங்கு கோயில் வாசலில் பிச்சைக்காரர்கள் இல்லையா? என்றேன். ஆமாம் இருக்கின்றனர் என்றனர். திருவாரூரில் பிறந்த மனிதர்கள் யாருமே, கூன், குருடு, செவிடு, முடம், அறிவற்றவர்களாகவும் பிறக்கவில்லையா? என்றேன். ஆமாம்மா எல்லாம் உண்டு என்றனர். உடனே, நான் (அடியேன்) ஆத்மாவாம், உயிர்கள், ஓரறிவு, ஈரறிவு, மூவறிவு, நாலறிவு, ஐந்தறிவு, ஆறறிவு, இப்படி அறுவகைப் பிறவி எடுத்து ஆறாம் அறிவுக்குப் பிறகு பகுத்தறிவாம். ஞான அறிவு பெற்று, தெய்வப் பிறவியாம் ஏழாம் அறிவு பெற்று வானுலகம் சென்று, மீண்டும் இறைவனின் திருவருளில் மனித உடலில் உள்ளபோதே திருவடிப் பேரின்பம் அடையணும். உலகத்தை உடலில் பார்க்கலாம். அண்டத்தை மனித பிண்டத்தில் பார்க்கலாம். அப்படியிருக்கும் போது, மனிதர்களான இந்தப் பிச்சைக்காரர்கள் என்ன பாவம் செய்துள்ளனர். குறையாகவே பிறந்த மனிதன் என்ன பாவம் செய்துள்ளான். இவர்கள் யாவரும் எப்போது இறைவனது திருவருள் பெற்று திருவடி இன்பம் அடைவது.

புனிதமான மனித ஆத்மா, தூய மனதில் ஆத்ம ஜோதியைக் கண்டு, மாயத்திரை விலக்கி, அதனால், ஞானக் கண்ணாம் மூன்றாம் கண் திறந்து மூன்றாவது கண்ணில் ஆத்மா ஞான ஜோதியாகி, ஞானஜோதியினுள் முருகன் உதித்து, பக்கக் கண்மணியாகத் துணை வரவேண்டும்.







''பக்திக்கு வழிகாட்டும் கந்தனடி - இவன்
முக்திக்கு விழியாக வருவானடி
முக்தியைத் தரணியில் தருவானடி - இவன்
சக்தி சிவனின் பாலனடி''

ஞானக் கண்ணாகிய புருவ நடுவே மேருவாகும். மேருவாம் இமவானுக்கு குழந்தையாக புருவ நடுவினில் ஆத்மன் பிறந்து, சிவகுருவின் உபதேசம் பெற்று, சிவப்பெருஞ்ஜோதியாம், பாதி ஆண் பெண்ணான பரஞ்ஜோதி இறைவனது அன்பினைப் பெற்று, திருவருள் பெற்று திருவடி அடையலாம். அதனால் நமது உடலாகிய உலக வழி தான் இறைவனை அடையணும் அதனால் ''ஞானக் கண்ணாம் திருவாரூராம் ஞானக்ஷேத்திரத்தில் பிறந்த அடியவர் யாராயினும் அந்த அடியாருக்கு இறைவனுடன் இரண்டறக் கலந்த அடியேனும் அடியேன் என்றேன். மிகவும் சந்தோஷம். தத்துவ விளக்கங்கள் மிகவும் நன்றாக, ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்கின்றது. மறுக்க முடியாது என்றனர்.

**(2) காசியில் இறந்தால் புண்ணியம்**

மயிலையில் கோயிலில் மாலையில் ஒரு அன்பரின் சொற்பொழிவு நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது அவர் சொன்னார். ''காலை வெட்டியாவது காசியில் உட்கார்ந்து கொள்'' என்று பெரியவர்கள் கூறும் வார்த்தை ஒன்றுள்ளது. ஏனென்றால் காலை வெட்டிவிட்டால் உன்னால் எங்கேயும் செல்ல முடியாது. அதனால் காலை வெட்டிவிட்டு காசியில் உட்கார்ந்து விட்டால், காசியிலேயே உயிர் துறந்தால் புண்ணியம் அல்லவா? அதனால் காலை வெட்டியாவது காசியில் உட்கார்ந்து விடு. உனக்கு புண்ணியம் என்று சொன்னார். உடனே அருகில் உள்ள சிலர், ஆஹா என்ன ஞானம், என்ன அறிவு, எவ்வளவு அழகாக சொல்கிறார் என்று, ரசித்து சொல்வது என் காதில் விழுந்தது. ஆனால்,

அதேசமயம், இறைவன், என் உள்ளுணர்வாக உணர்த்தித் தூண்ட, அடியேன் நினைந்தேன். சொல்பவர்தான், தத்துவ விளக்கங்கள் புரியாமல் படித்ததை அப்படியே சொல்லி, சரியாக விளக்கமும் கூறவில்லை, ஆனால், கேட்பவர்களும் புரியாமல் ரசிக்கின்றார்களே என்று வருந்தினேன். புரிய வைக்கணும் என்று இறைவன் உணர்த்தினார். அதனால் விளக்கி எழுதுகின்றேன்.

மனிதப் பிறவி சிறந்த பிறவி! இதில் கூன் குருடு, செவிடு, முடம் என பிறவாமை சிறப்பு. பிறவியில் குறையின்றி பிறத்தலே சிறப்பு. அப்படியே நாம் சிறப்பாக பிறந்தாலும் இறைவா! உன்னை மறக்காமல் இருப்பது அரிது என்கிறார்

ஔவையார். அப்படியிருக்க இறைவன் அளித்த அழகான காலை அறிவின்றி வெட்டுவது சரியாகுமா? கால்களை வெட்டிவிட்டு, ஏன் பிறருக்கும் உதவி இல்லாமல், பிறருக்கு பாரமாக, பிறர் உதவியினை எதிர்பார்த்தும், நமக்கே நாம் பாரமாக இருப்பது சரியாகுமா? கடவுள் அளித்த அழகிய கால்களை வெட்டிவிட்டு இவ்வுலகில் ஏன் இருக்க வேண்டும். எப்படி நிம்மதியாக வாழ முடியும்? என்று உணர்வு தோன்றியது.

''காலை வெட்டியாவது காசியில் உட்கார்ந்து கொள். ஏனெனில் காசியில் இறந்தால் புண்ணியம் என்கிறார்களே.'' இதைப் பற்றி நீங்கள் என்ன சொல் கிறீர்கள் என்று சிலரிடம் கேட்டேன். உடனே அவர்கள் ஆமாம் அம்மா காசியில் இறந்தால் மிக புண்ணியம். அதனால், யாராவது இங்கே இறந்தால் கூட காசிக்கு சென்று, கர்ம காரியங்கள் செய்தால் புண்ணியம் கிடைக்கும். மோட்சம் கிடைக்கும். அதனால்தான் காசிக்குச் சென்று அந்தக் காரியங் களைச் செய்கின்றனர் என்று கூறினார்கள்.

உடனே நான், அப்படியானால், இப்பவும் நான் கேட்கிறேன். எது காசி க்ஷேத்திரம் என்று உங்க ளால் சொல்ல முடியுமா? என்றேன். உடனே அவர் கள் அம்மா உங்களிடம் பதில் சொல்ல பயமாக இருக்கின்றது. சரியான பதில் எங்களால் சொல்ல முடியாது. நீங்களே சொல்லுங்கள் அம்மா என்றனர்.

அடியேன் அன்புடன் என்னை அணைத் திருக்கும் தாய் தந்தையராம் சிவசக்தியின் திருவரு ளால் உணர்வாக உணர்ந்து விளக்கம் கூறினேன்.

காசியில் இதுவரை எவ்வளவோ உயிரினங் கள் அங்கேயே பிறந்து வளர்ந்து இறக்கின்றன. நம் காலை வெட்டாமலேயே காசியில் இறந்தால் புண்ணியம். ஆனால், அவைகள் யாவும் புண்ணிய மடையவில்லையே. காசியில், புல், புழு, பூச்சிகள், பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் இருக்கிறார் கள் அல்லவா? கோயிலில் பிச்சைக்காரர்களும் உள்ளனரே! இவர்கள் எப்போது சிறந்த ஞானமுள்ள மனிதப் பிறவியாகி இறைவனது அருளையும் அன்பையும் பெறுவர்?

இறைவன் கொடுத்த கால்களை வெட்ட நமக்கு ஏது உரிமை? காசினி என்றால் உலகமாகும். உல கத்தை உடலில் காணலாம். அண்டத்தை பிண்டத்தி னில் காணலாம். உலகமாகிய உடலாம் காசினி யில் இருக்கும்போதே உடையவனை இரண்டறக் கலந்து பேரின்பம் அனுபவிக்க வேண்டும். காசினி என்றால் பூமியாகும். உலகில் உள்ளபோதே உட லைக் கடந்து சென்று உடலில் உடையவனைக் கலந்து கொண்டு தன் கபாலத்தைத் தாங்கி ஆனந்தத் தாண்டவம் ஆடி பிரும்மானந்தமாம் பேரின்பத் திருவடி ஆனந்தம் பெற வேண்டும். ''இருக்கும் இடத்தில் இருந்து இறைவனை நினைத்து இயற் கையை ரசித்து, இறைவனின் குணம் கொண்டால் பேரின்பம் பெறுவது நிச்சயம் - மனிதன் பேரின்பம் பெறுவது நிச்சயம்.''

சிரசின் உச்சியைக் கடந்து சென்று கபாலம் தாங்கி தாண்டவமாடி, உடலில் உயிர் இருந்தும் இல்லாத நிலையாக வேண்டும். அரு உருவைத் தாங்கி பவனி வரவேண்டும். அதாவது உடலாகிய காசினியில் உணர்வுகள் உள்ளபோதே, உணர்வுடன் உயிர், உடையவனைக் கலந்து இன்பம் அனுப வித்து முக்தியாம், மோக்ஷ நிலையாம், சிவசாயுஜ் யம் அடைந்து மகிழும். காயம் சித்தியாகும். மரணமில்லாப் பேரின்பமாம் அத்வைதப் பேரின் பம் அனுபவிக்கும். இந்தப் பேரின்பமாம் நிலையே, காசியில் இறந்தால் முக்தி என்ற தத்துவமாகும் என்று கூறியதும் பக்தர்கள் மிகவும் மகிழ்ந்தனர். தன் காலால் செல்லாமல் உயிர்ப்பாம் மூச்சுக் காலால் செல்வது ஆகும்.

### 3) சிதம்பரத்தைக் கண்டால் புண்ணியம்

எனது பக்தர் ஒருவர் என்னிடம், அம்மா, இராமலிங்க சுவாமிகள் ''வானத் தின் மீது மயில் ஆடக் கண்டேன். மயில் குயில் ஆச்சுதடி'' என்று பாடியுள் ளார். மயில் எப்படிக் குயில் ஆகும்? இதன் விளக்கம் கூற வேண்டும் என்று கேட்டார். இறைவனருளில் அனுபவமாம் விளக்கம் கூறினேன்.

அயரா உழைப்பும் ஆண்டவன் நினைப்பும் கொண்டால் மனம் தூய்மை பெறும். சொல்லும் செயலும் ஒன்றாய் இருந்தால் மனம் தூய்மை பெறும். சிந்தனை, சொல், செயல் ஒன்றாய் இருந்தால் அதுவே தெய்வீகம். தூய்மையான மனமே மயில் ஆகும். ''தூய மனமே திருமயிலை, திருவடி இன்பமே திருக்கயிலை. திருவடியின்பமாம் பரஞ்ஜோதியாம் வான்ஜோதி இறைவனுடன் ஆத்மஜோதி இணைந்து பரத்தில் ஆடும் சமயம், பரமாம் வான் மீது மனமாம் மயில் ஆடுகின்றது. அதாவது சித்தமாம் மனம் பரத் தில் ஆடும். அதனால் அது சித்பர சக்கர ஜோதி ஆகும். சித்தம் பரத்தில் ஆடுவதால் சித்தம் + பரசக்கரம் சித்தம்பரச் சக்கரம் ஆகும். பரம் என்பது வான் ஆகும். வான் என்னும் பரத்தினில் மனம் என்னும் சித்தம் சேர்ந்து ஆடும் சமயத்தில், அதாவது வானத் தின் மீது மயிலாகிய மனம் ஆடிடும் சமயத்தில்

ஆத்மாவின் சிவ இன்ப உணர்வுகளையும், ஆத்மா பரத்தில் கண்ட சிவ இன்ப காட்சிகளையும், மன மாகிய மயில் குயிலாகப் பாடும்.'' இப்படித்தான் ''வானத்தின் மீது மயில் ஆடக் கண்டேன் மயில் குயில் ஆச்சுதடி'' என்று நம் வள்ளல் பெருமான் பாடிய பாடலின் பொருள் இருக்க வேண்டும் என்பதை இறைவனது அருளில் அனுபவமாக கூறுகின்றேன். அடியேன் வள்ளலார் அடைந்த திருவடிப் பேரின்ப ஆனந்தம் அனுபவிப்பதால் மகிழ்ச்சியுடன் இத்தத் துவ விளக்கம் கூறுகின்றேன். சித்தமாகிய மனம் பரஞ்ஜோதியாகிய பரத்தைத் தன்னுள் கண்டு மகிழ் வதே திருவடிப் பேரின்பமாம் முக்தி நிலை. அத னால் சிதம்பரத்தைக் கண்டால் புண்ணியமாகும் என்றேன். உடனே பக்தர்கள் மிக்க மகிழ்ச்சியுடன், இதுமாதிரி தத்துவ விளக்கங்கள் சிவசக்தி அம்மா வால்தான் கூற முடியும். அவர்கள் அனுபவமான வர்கள் என்று மகிழ்ந்து கூறி 'ஓம்' 'ஓம்' என்று கூறினர்.

### (4) திருவண்ணாமலை நினைத்தாலே மிக மிக புண்ணியம்

ஒரு பக்தர், அம்மா, அப்படியானால் திரு வண்ணாமலையாரை நினைத் தாலே புண்ணியம் என்கிறார்களே! அதன் விளக்கம் சொல்லுங்கள், என்றார். உடனே அடியேன் இறைவன் உணர்த்த அனுபவ விளக்கம் கூறினேன்.

''நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம்
சூரியன் சந்திரன் ஆன்மா இவை யாவும்
பரஞ்ஜோதியாம் பரமன் திருமேனியாம்
அருள்ஞானப் பெருவெளியாம்
அருட்ஜோதியாகும்.''

பஞ்சபூதங்களும் சூரியன் சந்திரன் ஆன்மா இவையாவும் சேர்ந்ததே பரஞ்சோதியாம் அருட்பெருஞ்ஜோதியாம் அண்ணாமலை ஜோதியாகும்.

பஞ்ச பூதங்களுக்கு உருவம், தொடு உணர்வு, சுவை, சப்தம், வாசனை இந்த ஐந்து உணர்வுகளும் உள்ளன. பூமிக்கு இந்த ஐந்து உணர்வுகளும் இருப்ப தால் பூமி அசைவது இல்லை. நீருக்கு வாசனை இல்லை. மற்ற நான்கும் இருப்பதால் இடம் விட்டு இடம் பாய்கின்றது. நெருப்புக்கு வாசனை, சுவை, இரண்டும் இல்லை. மற்ற மூன்றும் இருப்பதால், அது நீரை விட வேகமாகப் பரவுகின்றது. காற்றுக்கு, வாசனை, சுவை, உருவம் இல்லை. ஆனால் தொடு உணர்வும், சப்தமும் மட்டும் இருக்கிறது. அதனால், காற்று இந்த மூன்றையும் விட மிக வேகமாக - நாடு விட்டு நாடு பாய்கின்றது. ஆகாயத்துக்கு சப்தம் மட்டுமே உள்ளது. மற்ற நான்கு உணர்வுகளும் இல்லாததால், அது மிக மிக வேகமாகப் பரவுகின்றது. அமெரிக்கா லண்டன் முதலிய வெளிநாட்டிலுள்ள வர்களிடம் அருகிலுள்ளவர்கள் போன்று பேசலாம். அவ்வளவு வேகமாக ஒரு நொடியில் சப்தம் வெளிநாட்டுக்கே கேட்கின்றது. தொலைபேசியில் அப்படி அழகாக பேசலாம். இறைவன் இந்த ஐந்து பூதங்களின் உணர்வுகளைக் கடந்தவர். ஐந்தினைக் கடந்தவராதலால், ஐந்தாகவே இருப்பவராதலால், ஐந்துடன் கலந்தவராதலால், ஒளிமயமாகவே இருப்ப வராதலால் மிக மிக வேகமாகப் பாய்கின்றவரா வார். நினைத்தால் நினைத்தவுடன் கனிவுடன் அருள் புரிவார். திருஅண்ணாமலையாரை நினைத்தாலே புண்ணியம். அகண்ட பிரும்மாண்ட ஜோதியாம் நம் இறைவன் நம் தாய் தந்தை பாதி ஆண் பெண்ணான வர். ஜோதி தெய்வமானவர். ஜோதித் தாண்டவமாடு பவர். ஆதி அந்தமுமானவர். ஆதி அந்தம் அற்றவர். ஜாதி பேதம் இல்லாதவர். அன்றும் இன்றும் என் றும் எங்கும் நீக்கமற நிறைந்து நின்று எங்கும் எதி லும் புகுந்து வியாபித்து இருக்கும் விஸ்வ ஜோதியே திருஅண்ணாமலை ஜோதி. இதுவே சுவயம்பு ஜோதி. சுதந்திர ஜோதி. இது அருட்பெருஞ்ஜோதி. அகண்ட ஜோதியை அண்ணாந்து பார்ப்பதால் அகண்ட ஜோதியே அண்ணாமலை. தந்தை அண்ணாமலை. அண்ணா மலையாரை அண்ணாந்து பார்த்தே உணவு உண்ணா திருக்க விரும்பும் உண்ணாமலைத் தாய் உண்ணா முலை.

***ராகம்: சிவரஞ்ஜனி*** ***தாளம்: ஆதி***

**பல்லவி**

அந்தத்தில் வைத்த நாவே அண்ணாமலை - நம்
அமுதம் ஊறும் உள்நாக்கு உண்ணாமுலை.

**அனுபல்லவி**

வாயைத் திறந்தால் தெரியும் நாக்கு
அண்ணாமலை-நம்
வாய்க்குள்ளே மறைந்த நாக்கு உண்ணாமுலை - நம்
அண்ணாக்கு அண்ணாமலை - நம்
உள்நாக்கு உண்ணாமுலை.

***சரணம் - 1***

அகண்ட ஜோதியை அண்ணாந்து பார்ப்பதால்
அகண்ட ஜோதியே அண்ணாமலை - தந்தை

அண்ணாமலை / அண்ணாமலையாரை
அண்ணாந்து பார்த்தே உணவு உண்ணாதிருக்க விரும்பும்

உண்ணாமுலை தாய் உண்ணாமுலை - நம்
அண்ணாக்கு அண்ணாமலை - நம்
உள் நாக்கு உண்ணாமுலை.

*சரணம் - 2*

அந்தத்தில் நாவை வைத்து, அந்தத்து ஜோதியுடன்
ஆத்மஜோதி நிலையாகக் கலந்து மகிழ்வதால்
அந்தத்தில் வைத்த நாவே அண்ணாமலை - நம்
அந்த நாவாம் மலை அண்ணாமலை - நம்
அந்தத்தில் வைத்த நாவே அண்ணாமலை - நம்
அமுதம் ஊறும் உள்நாக்கு உண்ணாமுலை - நம்
அண்ணாக்கு அண்ணாமலை - நம்
உள் நாக்கு உண்ணாமுலை.

*சரணம் - 3*

அந்தத்தில் நாவை வைத்து மோன மந்திரம் சொல்லி
அந்தத்தில் கண்ட ஜோதி அண்ணாமலை
உள்நாக்கில் நாமம் ஒலித்து மோன மந்திரம் சொல்லி
உள் நோக்கிக் கண்ட ஜோதி உண்ணாமுலை
அந்தத்தில் வைத்த நாவே அண்ணாமலை
அமுதம் ஊறும் உள்நாக்கு உண்ணாமுலை
அண்ணாக்கு அண்ணாமலை - நம்
உள்நாக்கு உண்ணாமுலை.

*சரணம் - 4*

அந்தத்தில் நாவை வைத்து உள்நாக்கில் நாமம் ஒலித்து
கண்டத்தில் கண்டஜோதி அண்ணாமலை - நம்
வாயைத் திறந்தால் தெரியும் நாக்கு அண்ணாமலை - நம்
வாய்க்குள்ளே மறைந்த நாக்கு உண்ணாமுலை
அந்தத்தில் வைத்த நாவே அண்ணாமலை - நம்
அமுதம் ஊறும் உள்நாக்கு உண்ணாமுலை - நம்
அண்ணாக்கு அண்ணாமலை - நம்
உள்நாக்கு உண்ணாமுலை.

உள்நாக்கில் ஊறும், ஞான அமுதமாம் ஞானப் பாலை உண்ணாமல் உண்பதால் உண்ணாமுலை.

மெய்யான இவ்வுடலை பொய்யென்று நம்பி பொய்யாகிப் போய் விடாதீர்கள். மெய்யுடலில், ஞானக்கண்ணாம் திருவாரூரில் ஞான க்ஷேத்திரத்தில் பிறந்து, காசினியாம், பூமியாம், மண்ணாம், காசி க்ஷேத்திரமாம் இந்த மெய்யுடலில் இருந்து இருக்கும் இடத்தில் இவ்வுடலைக் கடந்து சென்று, மெய்யுடலில் உள்ளபோதே இருந்தும் இல்லாத நிலையாகி, சித்தமாம் மனம் பரத்தினில் ஆடுவதால், சித்தம் + பரத்தின் = சிதம்பரத்தின் காட்சிகள் கண்டு, நினைத்தால் நினைத்த மாத்திரத்தில் எப்பவும் அண்ணாமலை ஜோதியாம் சிவப்பெருஞ் ஜோதியை கண்ணை திறந்து கொண்டே, உச்சியிலும், வெளியிலும், எங்கெங்கும் நீக்கமற நிறைந்த காட்சியைக் கண்டு ரசித்திடல் வேண்டும்.

இருக்கும் இடத்தில் இருந்து, இயற்கையை ரசித்து, இறைவன் குணம் கொண்டு இறைவனை நினைத்தால் உருகினால், நினைத்தால் நினைத்த இடத்தில் காட்சி தந்து கலந்து கொண்டு, கூடவே இருந்து, தானே தவம் யோகம் செய்து, தானாக்கி மகிழ்ந்து அருள்பவர் நம் அன்புத் தாய் தந்தையான திரு அண்ணாமலை ஜோதியாம் சிவப்பெருஞ் ஜோதியாம், அருட்பெருஞ் ஜோதியாம்.

**ராகம்: ஆபேரி** **தாளம்: ஆதி**

*பல்லவி*

அடியார்க்கு இவ்வுலகில் கிடைத்த பெருமை எல்லாம்
சிவஞான ஜோதிப் பழமாம் சிவகுருவாம் கந்தனுக்கே

*அனுபல்லவி*

உற்சவ மூர்த்தியாம் தக்ஷிணா மூர்த்தியாம்
தெற்கு பார்த்து பவனி வரும் சிவனின் கண்மணிக்கே
பக்கக் கண்மணியாம் சிவகுருவாம் கண் மணிக்கே (அடி)

*சரணம்-1*

அவரவர் உணர்வாக அனுபவிக்கும் பேரின்பம்
சொல்ல முடிவதில்லை சொல்லியும் அடங்கவில்லை
அடியாரின் அறிவுரையை நம்பி நடக்கும் அன்பருக்கு
சந்தேகம் இன்றியே திருவடி இன்பநிலை (அடி)

''எத்தனைதான் உரைத்தாலும் இத்தனை உபதேசமும்
அத்தனையும் கேட்பவர்க்கே ஞானத் தங்கமே!
இத்தனையும் ரசிப்பவர்க்கே ஞானத் தங்கமே!
இத்தனையும் ருசிப்பவர்க்கே ஞானத் தங்கமே!
சுயம்பு ஜோதியான சுதந்திர ஜோதியே
சுயம்புவான உன்னை வையகமும் பெறவேண்டும்
யான்பெற்ற இன்பம் இந்த வையகமும் பெறவேண்டும்!

ஓம்! ஓம்! ஓம்!
அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ்ஜோதி!

★★★

# பக்த ஸ்ரீ மீராபாய்

- திருமதி மீனாட்சி கோகுலவாசன்

இறைவனைத் தலைவனாகவும், தன்னைத் தலைவியாகவும் நினைத்து வழிபடும் முறை, தமிழ் நாட்டிற்குப் புதிதன்று. இதை 'நாயக நாயகி' பாவம் என்று சொல்லுவது உண்டு.

'தமிழ் வேதம்' என்று போற்றப்படும், 'நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்திலே', நாச்சியார் திருமொழியும், திருப்பாவையும் நடு நாயகமாக விளங்குகின்றன.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடி, ''மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய்'', என்று பேசுகிறாள். அவளுடைய தெய்வத்திருப் பாடல்களைப் பாடிய வாய் தேனூறும்!

அப்பாக்களின் உயர்வை சிந்தைக்கு இனிய, செவிக்கினிய, வாய்க்கினிய, வந்த இரு வினைக்கும் மாமருந்து,'' என்று பக்தர் உலகம் போற்றுகிறது.

தமிழ் நாட்டிலே ஆண்டாளுக்கு உரிய இடம், வட நாட்டில் மீராபாய்க்கு உண்டு!

சிற்சில வகையிலே மீராபாய், ஆண்டாளையும் விஞ்சிவிடுகிறார் எனலாம். மீராவின் பக்திக் காதல், உலக சரித்திரத்திலேயே புதுமை நிரம்பியது.

பக்தி சுவை சொட்டும் அவளுடைய இனிய பாக்கள் கேட்போர் இதயத்தைக் காந்தம் போல் கவரும் தன்மையுடையன.

பிற மதத்தினருக்கும் பக்தியை ஊட்டிய அமுதம் என்று அவர் பாடல்களைச் சொல்வது மிகையாகாது.

மீராவின் பெயரை அறியாத மக்கள் பாரத பூமியிலேயே இல்லை.

வட நாட்டிலே உதயப்பூர் என்ற ஒரு சிற்றரசு! அதைப் பூநாயகன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனும் அவனுடைய மனைவி சந்திரமுகியும் தெய்வபக்தி மிகுந்தவர்கள்.

நீண்ட நாட்களுக்குப்பின், அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது! தெய்வத்திருவருளால் கிடைத்தது என்று மனம் மகிழ்ந்து, பேணிப் பாதுகாத்து வளர்த்தனர். மீராபாய் என்று பெயரும் சூட்டினர்.

குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். வித்யாரம்பமும் நடந்தது.

குழந்தை மீராவின் விளையாடல்களிலேயே தெய்வ மணம் கமழ்ந்தது. தனது விளையாட்டுக்கென்று அவள் ஒரு கிருஷ்ண விக்கிரகம் வைத்துக் கொண்டிருந்தாள். அதை எப்பொழுதும் தன்னுடனேயே அணைத்துக்கொண்டிருப்பாள்; இரவிலும் அவள் தூங்கும் பொழுதும் அவளுடனேயே கிடக்கும்.

அரண்மனை ஆனதால், அவ்வப்பொழுது பாகவதக் கதைகள் பெரியோர்களால் சொல்லப் படும். அப்பொழுதெல்லாம் திறந்தவாய் மூடாமல் கேட்பாள். கண்ணனது பெருமைகளைக் கேட்கக் கேட்க அவள் முகம் ஆச்சரியத்தால் மலரும்! 'தன்னிடம் சிறு பொம்மை வடிவமாய் விளங்கும் இந்தக் கோபாலனா, இத்தனைச் சாகசச் செயல்களைச் செய்தான்,' என்று வியக்கும். அவள் பிஞ்சு மனம் கண்ணனுடைய லீலாமிருதத்தில் மூழ்கும். கண்ணனையே தானும் ஏன் அடையக் கூடாது என்று தோன்றும்.

கண்ணனுடைய மற்ற எல்லாச் செயல்களையும்விட குன்றைக்குடையாய் எடுத்த காட்சிதான், அவளக்கு மிகவும் அற்புதமாகத் தோன்றும். கொட்டுகிற மழையிலே, மக்களைக் காக்க மலையைத் தூக்கினார்...!? என்று ஆச்சரியத்துள் அழும் அவள் நெஞ்சம் 'நந்தன், செல்வன், கிரிதாரி, நந்தலாலா,' என்ற சொற்களே அவள் வாயில் எழும்.

இப்படியே மீராவும் வளர்ந்தாள்; பக்தியும் வளர்ந்தது.! 'மானிடர்களுக்கென்று மணந்து வாழ மாட்டேன்' என்ற சொல் இங்கேயும் எழுந்தது!

இராஜ குமாரர்களது ஓவியங்கள் எல்லாம் கன்னி மாடத்தில் குவிந்தவண்ணம் இருக்கும். இவளோஅவைகளைத் திரும்பிக் கூடப்பார்க்க மாட்டாள்.



கண்ணனையே தான் மணந்து கொள்ள வேண்டுமென்று நினைக்கும் பொழுதெல்லாம் 'மானிடப் பெண்ணாகிய நம்மை அவர் ஏற்பாரோ', என்று தோன்றும். உடனே மெய்யன்புள்ள அடியார்களுக்குத்தான் அருள் செய்வது அவன் தன்மை! உண்மையான அன்பும் உறுதியும் இருந்தால், கட்டாயம் வந்து நம்மை மணந்தே தீருவான்; இதில் சந்தேகமென்ன!, என்று அவள் மனமே பதில் சொல்லும்.

இப்படியாக இவள் தனக்குத்தானே பேசிக் கொள்வது தோழிகளுக்கும் தெரியும். அவர்கள் மீராவின் பெற்றோர்களிடம் தெரிவித்தனர்.

'தெய்வபக்தி என்று நினைத்தோமே, விபரீதமாகி விடுமோ'? என்றும், 'வயது வந்த பெண், கண்ணனை மணப்பதாவது', என்று கன்னிமாடம் சென்று, 'இறைவனை மணப்பது என்பது நடக்காது: அவனை பூஜித்து ஆராதனைகள் செய்வதுதான் முறை' என்று எடுத்துச் சொன்னார்கள்.

அவளோ இதைஎல்லாம் ஏற்காமல் தன் பெற்றோர்களிடம் கண்ணனை வழிபட உத்தரவு வாங்கினாள்; அரண்மனை அந்தப்புரத்திலேயே பஜனையும், பாகவதர்களது ஆராதனையும் நடைபெறலாயின.

மீராவின் பஜனைகளும், பக்தியும் அதிகம் ஆகவே மீராவின் தந்தை கொதித்தெழுந்தார். தன் மனைவியிடம் மீராவுக்கு விஷத்தைக் கொடுக்கச் சொன்னார். தாயுள்ளம் தவித்தது; 'அரசுக்குரிய என் கண்மணிக்கு, மணக்கோலத்திலே மாலையும் கழுத்துமாய்ப் பார்க்க வேண்டிய என் மகளுக்கு விஷமிடுவதா!..? என்று துடிதுடித்துத் தவித்தாள். ''அம்மா! குழந்தாய்! நீ வருந்தாதே, அவளுக்கு ஒன்றும் நேராது'', என்று அசரீரி கேட்டது! 'இத உண்மையா, பிரமையா', என்று சிந்தித்தவளாய் அன்னம் ஊட்டிய கைகள், இன்று விஷக் கிண்ணத்தைக் கொடுத்தது...? ''அம்மா! வருந்தாதே! இதுவும் அவன் சோதனை! பிரஹல்லாதனுக்குக் கொடுக்கவில்லையா? ஏ கிரிதாரி! இது உனக்கே அர்ப்பணம்,'' என்று அந்த விஷத்தைக் குடித்துவிட்டாள் மீரா...!

விஷத்தைக் குடித்த மீரா கலகலவெனச் சிரிப்பது கேட்டு எழுந்தாள் தாய்...! மீரா சிரிக்கச் சிரிக்க அந்த கிருஷ்ண விக்கிரகம் மேலும் நீலநிறமாக மாறிற்று...! இதைக் கண்ட அரசன் முதல் அறிந்த அனைவருக்கும் அச்சத்தை அளித்தன. மீராவின் பக்தியைக் கண்டு அனைவரும் பணிந்தனர்.

மேவார் நாட்டை ஆண்ட கும்பராணா என்பவர், இதைக் கேள்விப்பட்டு, தமக்கு வேறு மனைவிகள் இருந்தும், தெய்வபக்தியுள்ள ஒரு பெண்ணை மணக்க விருப்பப்பட்டார். இச்செய்தி தூதுவர் மூலம் உதயப்பூரை அடைந்தது.

மீரா சிந்தித்தாள்; கண்ணன் பெருமையை அறிந்த தனக்கு, மனிதனை மணப்பது சரி அல்ல எனத் தோன்றிற்று.

இச்சமயத்தில் மீரா ஒரு கனவு கண்டாள். ஆண்டாள் கண்ட கனவுபோலவே, மீராவின் வாழ்க்கையிலும் அற்புதமானதொரு கனவு நிகழ்ந்தது; தோழிக்குப்பதில் தாய் சந்திரமுகி வருகிறாள்.

கண்ணனே முதியோனாகவந்து, ''கும்பராணா தெய்வபக்தியில் சிறந்தவர்! கண்ணனிடம் பேரன்பு பூண்டவர்; அவரை ஏற்றுக்கொள்,'' என்கிறான்.

மீராவுக்கும் முதியோன் சொல்வது நியாயமென்றே தோன்றிற்று. ஈசன் திருவுள்ளம் போலும் என்றே நினைத்தாள்.

கும்பராணாவும் ஒரு சுபநாளிலே மீராவின் மலர்க்கரங்களைப் பற்றினார். அவர் சிறந்த பக்தர் மட்டும் அல்ல; சிறந்த ரசிகர். ஜயதேவரது கீத கோவிந்த மகாக்காவியத்துக்கு, 'ரஸிப்ரியா' என்ற

உரையையும், ''சங்கீத ராஜம்'' லஷணக்கிரந்தத்தையும் எழுதியவர்.

மீராவின் வரவினால் புதியதொரு உவகை அவர் மனத்துள் எழுந்தது. அவளுக்கென்றே ஒரு கோயில், அன்னதான சத்திரம், பாகவத கோஷ்டிகள் தங்குவதற்கு வேண்டிய வசதிகள் எல்லாம் எழுந்தன. அந்தப்பிரதேசம் முழுவதும் அவளுடைய பாடல்களும், நாமாவளிகளும் எதிரொலித்தன. இப்படி இனிமையாக சில காலம் கழிந்தது!

ராணாவின் மூத்த ராணிக்கு, மீராவுக்கே பெருமை கொடுப்பது பிடிக்கவில்லை. 'ஊதா' என்ற ராணாவின் தங்கையுடன் சேர்ந்துகொண்டு, சதிகள் பல, செய்தாள். இளைய ராணியின் நண்பன் 'மந்தார்' ராஜகுமாரன். இவனைப் பற்றியோ, இளைய ராணியைப்பற்றியோ ஒன்றுமே அறியாதவள் மீரா. அந்தப் புரத்துக் கோயிலில் பஜனைக்கு வர அனுமதி கேட்க, மீரா அனுமதித்தாள். இந்தச் செய்தியை வம்பாகத் திரித்து, அது மெல்ல ராணாவின் காது வரை சென்றது.

மீரா ஏகாதசி என்றால் தெய்வ வடிவமாகவே காணப்படுவாள். தான் அரசி என்பதையும் மறந்து, ஆடியும், பாடியும் வழிபடுவாள்.

அவளது பஜனையைக் கேட்க இந்துக்கள் மட்டுமல்ல, முஸ்லீம்களும், பௌத்தரும், ஜைனரும் ஆகிய எல்லோரும் வந்து குவிவார்கள்.

மீராவின் பாடல்களின் இனிமை, அக்பர் பாதுஷாவின் செவிகளிலும் விழுந்தது. அவர் கவிஞர் 'தான்ஸேன்' என்பவருடன் மாறு வேடத்தில் சென்று, அந்த ஏகாதசி பஜனையில் கலந்து கொண்டனர்.

பாதுஷாவின் வரவு ஒருவருக்கும் தெரியாது. ஒரு விலையுயர்ந்த முத்து மாலையை மீராவின் கிரிதர கோபாலனுக்கு காணிக்கையாகக் கொடுத்து மிகுந்த மகிழ்ச்சியடைந்தான்.

இம் முறை கும்பராணாவின் செவிகளில் படும்படியாக வம்பு செய்தனர். ராணாவும், மீராவைக் கண்டிக்கலானார்.

மீராவும், ''ஜாதி ஏது, குலம் ஏது? சர்வேஸ்வரன் ஒருவன்தான் புருஷன்! நாமெல்லோரும் பெண்களே! அவன் பதி, நாம் பசுக்கள்! தொண்டர் குலம் ஒரே குலம் தானே!'' என்றாள்.

ராணாவுக்கு மீராவின் மேலுள்ள அன்பு மனைவி என்ற நிலை மாறி, தெய்வப்பெண் என்று தோன்றி, மேலும் வளர்ந்தது.

ராணா பல நாட்கள் மனத்தை அரித்துவந்த வேதனையில், ஒரு நாள் கோபத்திலே, மீராவிடம் ''அக்பர் பாதுஷா வந்ததும், தான்ஸேன் உடன் வந்து பாடியதும், முத்து மாலை அளித்ததும் உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டுவிட்டார்.

உண்மையில் அவளுக்குத் தெரியாது. அவள் தெரியாது என்று சொல்ல ராணா கோபத்தில் சில சுடு சொற்கள் சொல்லிவிட்டார். மீராவும் ''பாதுஷா வந்தாரா? எனக்கு எப்படித் தெரியும்! நூறாயிரம் பக்தர்களும், பக்கிர்களும் கிரிதாரியின் நாம சங்கீர்த்தனம் செய்யுமிடத்தில் யார் என்று எப்படித் தெரிந்து கொள்வேன்! பெண்ணென்று பூமியில் பிறந்து விட்டால் பக்தி செய்வதும் கூடத்தவறா?'' என்று கேட்டாள்.

'கணவனின் பாதசேவைதான் முதலில் என்றிருந்தும் என் மேல் களங்கம் தோன்றுமோ? பிருந்தாவன கோபிகளை உதாரணம் கூறிய என் கிரிதாரி, அவனே இதற்கும் விடை சொல்லட்டும்,' என்று நினைத்தாள்.

அன்று பஜனை முடிந்ததும், மீரா அரண்மனை திரும்பவில்லை; பிருந்தாவனத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டாள்.

மீரா நாட்டைத் துறந்து போகிறாள், என்ற செய்தி கேட்ட ராணா, சமாதானம் சொல்லி அழைத்தார், கெஞ்சினார்.

ஆனால் மீரா அரண்மனைக்குத் திரும்பிச் செல்ல விரும்பவில்லை. ''உங்கள் கோபமும், என் வைராக்கியமும் அவன் திருவுள்ளம்,'' என்று அவள் திரும்பிப் பாராமலேயே சென்றாள்.

ராணா கண்ணீர் மல்கும் கண்களுடன் அவளையே பார்த்துக் கொண்டு நின்றார்.

மீரா பிருந்தாவனம் போன செய்தி அறிந்ததும், ஊரார் ராணாவைத் தூற்றலாயினர். மந்திரி ரகுநாதபட்டர், ராணாவைக் கண்டு, அவளை மீண்டும் அழைத்து வரும்படி சொன்னார்.

பிருந்தாவனத்தில் நந்தகுமாரன் சந்நிதியில் 'ரூபகோபஸ்வாமி' என்ற ஒரு பெரியவர் இருந்தார்.

இவரது நூல், 'உஜ்வல நீலமணி' என்ற பெயருடையது. இவர் பெண்களைப் பார்ப்பதில்லை என்று விரதம் பூண்டவர். மீராவைப் பார்க்க அஞ்சியவர், பிறகு அவளுடைய கருத்துக்களைக் கேட்டு மனம் தெளிவடைந்தார்.

இந்த சந்தர்ப்பத்தில் ராணா வந்து, மீராவை மறுபடியும் அழைக்கலானார். மீராவின் உண்மையான பெருமை, அவருக்கு புலனாயிற்று. மேவாரில் வந்து வசிக்கும்படி வேண்ட, மீராவும், ''எனக்கு இனி ஊர் ஏது? உறவேது? கண்ணன் இருப்பிடமே என் இடம், பக்தி செய்வதுதான் என் தொழில். அப்படிக் கோயிலிலேயே காலங்கழிப்பதானால் வருவேன். இனி அரசி நிலையிலே என்னால் வாழ முடியாது,'' என்றாள்.

கண்ணன் பிறந்த நாள் அன்று கிரிதாரியின் கோயிலிலே ஒரே கோலாகலம். தீப அலங்காரங்களால் ஜொலித்துக் கொண்டிருந்தது கோயில். அங்கங்கே நாமாவளிகளின் கோஷமும், வாத்தியங்களின் ஒலியும், ஒன்றையொன்று விஞ்சி நின்றது. கிரிதாரியின் விக்கிரகம், அற்புதமான ஆபரணங்களினாலும், மலர் மாலைகளினாலும் நிறைந்தது. அழகு மிளிர, திருமுகத்தில் முறுவல், கண்களிலே அருள் நோக்குடன், கைகளிலே குழல் இப்படியாகக் காட்சி தந்தான் வேணுகோபாலன்.

வலது கையில் தம்பூராவும், இடது கையில் 'சரதாளம்' என்ற சிப்ளாக்கட்டையுமாக மீரா மெய்மறந்து பாடிக்கொண்டிருந்தாள்.

கும்பராணா, பழைய நினைவுகளில் நெஞ்சம் ஓடவிட்டார். மீராவோ நின்ற நிலையிலே கால் சதங்கைகளுடன் கைத்தாளமும் ஒலிக்க, அற்புதமான, கானடா ராகத்திலே, ''தாஸமீராலாலகிரிதார'' என்ற தனது இதுயத்திலிருந்து எழுந்த கவிதையைப் பாடி மெய்மறந்து நர்த்தனம் செய்து கொண்டிருந்தாள். மீராவின் குரலொலி அந்த மகா மண்டபம் முழுவதுமே நிரம்பியது.

ராணா அவளை 'அரண்மனைக்குத் திரும்பலாமா' என்றழைத்தார்.

மீராவின் கண்களிலே கண்ணீர்! கரதாளம் நின்றது. ''ராணாஜீ! இந்த உடலுக்கு நாதன் நீங்கள் தான்; ஆனால், இதயநாதன் கோபாலன்! இன்று என்னை ஆட்கொள்ள முடிவு கொண்டான். தங்களைப் போன்ற பக்தி வழித் துணைவரை வணங்குகிறேன். நாம் இருவரும் சேர்ந்து செய்த கவிதைகளைப் பாடுவோம்,'' என்றாள்.

ராணாவும், மீராவும் கண்மூடி கானாமுதத்தில் மூழ்கி, மெய்மறந்த நிலையில் நீண்ட நேரம் சென்றது. நாமாவளி முடிந்ததும் கண்களைத் திறந்தார் கும்பராணா.

அதே சமயம் மெய்மறந்த நிலையில் பாடிக் கொண்டிருந்த மீரா, அவர் மலரடிக்கருகேசுருண்டு விழுந்தாள். அவள் வாய், ''கிரிதாரி! அழைக்கின்றாயா! இதோ வந்துவிட்டேன்,'' என்று முணு முணுத்தது. மெல்ல எழுந்து கர்ப்பக்கிரகத்தை நோக்கி இரண்டடி வைத்தவள், இறைவனது விக்கிரகத்தைத் தழுவிக்கொண்டாள்.

ஒரு கணம் மின்னல் மின்னியது! ஓர் ஒளி வட்டம்; நடுவே கண்ணனைத் தழுவிய கோலமாய் நின்றாள். மறுவினாடி கர்ப்பக் கிரகத்தின் கதவுகள் தாமாகவே மூடிக்கொண்டன. மீராவின் உடல் மறைந்து விட்டது. அவளது புடவை மட்டும் கண்களைச் சுற்றிக் கிடந்தது. அற்புதமான வேணுகானமும், அதன் கூடவே மீராவின் இனிய குரலும் கேட்கலாயின.

அடியற்ற மரம்போல் தரையில் வீழ்ந்து பணிந்தார் கும்பராணா.

மீரா மறைந்துபோனாள்! அவளுடைய அமுதமயமான கவிதைகள் பாரத நாட்டை விட்டு மறைந்து போக முடியுமா?

மீராபாயும், கும்பராணாவும் நம்முடைய நெஞ்சகமே கோயிலாகக்கொண்டு விட்டார்கள்.

மீராவின் அருமையான கவிதைகள், அருமையான உபதேசங்களே எனலாம்.

மீரா ஓர் இடத்தில் சொல்லுகிறார், 'மீரா கஹே பினாப்ரேம்ஸே நஹீம்மிலே நந்தலாலா' என்கிறார். அதாவது 'அன்பு என்பது இல்லாவிடில் அவனருள் கிட்டாது' என்கிறார்.

இதே கருத்தைத் தான் ஆழ்வார், 'அன்பில் அன்றி ஆழியானை யாவர் காண வல்லவரே' என்றார்.

மீராவும் கண்ணனும் ஒன்றாய் விளங்கும் ஓர் ஆலயம் உதயப்பூரில் உள்ளது.

மீராவைப் பற்றிய விவரங்கள், 'பக்தவிஜயம்' என்ற நூலில் விளக்கமாக விவரிக்கப்பட்டுள்ளது.

மீரா வணங்கிய நந்தலாலாவை, நாமும் மீராவையும் சேர்த்து வணங்குவோமாக...!

★★★

# திருக்குறுங்குடி

**- பைம்பொழில் கே. பாலசுப்பிரமணியன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎட்.

**முன்னுரை:** நூற்றியெட்டு வைணவத்தலங்களில் திருக்குறுங்குடியும் ஒன்று. அக்கோயிலின் அமைப்பு, வரலாறு, முதலியன பற்றிக் காண்போம்.

**இருப்பிடம்:** ஸ்ரீ அழகிய நம்பி திருக்கோவில் என்னும் வைணவத் தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் நான்குநேரி தாலுகாவில், திருக்குறுங்குடி என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது. குறுங்குடி என்றே ஆழ்வார்களது பாடல்களில் ஊர்ப்பெயர் காணப்படுகிறது. இத்தலம் திருநெல்வேலியிலிருந்து தென்மேற்கே அமைந்துள்ளது. இங்கு வருவதற்கு திருநெல்வேலி, வள்ளியூர், சேர்மாதேவி, ஆகிய ஊர்களிலிருந்து பஸ்வசதி உள்ளது.

**ஊர்பெயர்க்காரணம்:** இத்தலத்திற்கு குறுங்குடி என்றும் தென்குறுங்குடி என்றும் பெயர் வழங்குவது உண்டு. வாமன ஷேத்திரம் என்னும் சிறப்பு இப்பகுதிக்கு உண்டு. திருமால் குறுகிய வடிவம் எடுத்ததால், திரு என்னும் அடைமொழியைச் சேர்த்து திருக்குறுங்குடி என்னும் பெயர் அமைந்தது என்பர். இத்தலத்திற்கு ''தெற்குவீடு'' என்ற பெயரும் உண்டு. நிலையான பரமபதத்திலிருந்து எம்பெருமான் ஓடோடி வந்து, எழுந்தருளியிருக்கும் இத்தலம் பூலோக வைகுண்டத்திற்கு சமமானது என்பர்.

**கோவிலின் சிறப்புகள்:** வைணவத் திருத்தலத்தில் வேறெங்கும் காணமுடியாத ஒரு சிறந்த அம்சம் - நாயன்மாரால் பாடப்பெற்ற மகேந்திர நாதர் சிவன் கோயில் இங்கு உள்ளது. பாணர் வகுப்பைச்சேர்ந்த பரமபக்தனான நம்பாடுவானுக்கு தரிசனம் கொடுப்பதற்காக கொடிமரம் சற்று விலகிப் போகும்படி அருளிக் கோவிலுக்கு வெளியே நிற்கும் நம்பாடுவானுக்கு நம்பி காட்சி கொடுத்தார் என்பர். இப்போதும் இங்கு கொடிமரம் சன்னதிக்குச் சிறிதுவிலகியே இருப்பதைக் காணலாம்.

**கோயில் அமைப்பு:** இக்கோவில் சுமார் 18 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. ஐந்து திரு மதில்களுடனும், இரண்டு கோபுரங்களுடனும், பல சன்னதிகளுடனும் மிகச் சிறப்பாக கட்டப்பட்டிருக்கிறது.

**கோபுர வாயில்:** திருக்குறுங்குடி வந்து ஸ்ரீ நம்பி ''வீடு பேறு பெற்றவர்'' என்று திருமங்கையாழ்வார் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது. பர கால கவிக்குத் திருவரங்கத்தில் தெற்கு கோபுரவாயில் போலவே, திருக்கோவில் வாசல் அமைக்கப்பட்டிருப்பதே இதற்குச் சான்று.

**கோபுரம்:** இக்கோயிலின் கோபுரம் கிழக்குப் பார்த்தவாறு அமைந்துள்ளது. இக்கோபுரத்திற்கு ''இராயர் கோபுரம் என்றும் பெயருண்டு. இதன் நுழைவாயிலின் உயரம் 32 அடியும், அகலம் 24 அடியும் கொண்டதாக அமைந்துள்ளது. மிகப் பெரிய தேக்கு மரக்கதவு ஒன்று அமைந்துள்ளது. இக்கோவில் கதவு ஜீயர் சுவாமிகளால் நிறுவப்பட்டது என்பர். உள்ளே நுழையும்போது மேலே ஒரு கல்வெட்டு போன்ற அமைப்பு வண்ணத்தில் எழுதப்பட்டுள்ளது.

**இரதி மண்டபம்:** இரதி மண்டபம் பல சிற்ப வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது. பாண்டிய மன்னர்கள் கட்டியது இது. கர்ணன், அர்ச்சுனன், இரதி, மன்மதன், கந்தருவன், தடாதகை பிராட்டி கந்தர்வநடனமாது ஆகிய சிற்பங்கள் மிகவும் அழகாகவும் தத்துவ ரீதியாகவும் அமைக்கப்பட்டுள்ளன.

**சித்திரக்கோபுரம்:** இரதி மண்படத்திலிருந்து உள்ளே சென்றால் இராச கோபுரம் என்ற அமைப்பையுடைய கோபுரம் காணப்படுகிறது. இக்கோபுரம் சுமார் 80 அடி உயரமும் 45 அடி அகலமும் கொண்டதாக சிறப்புடன் அமைந்துள்ளது. ஐந்து நிலைகளைக் கொண்டது. இத்தலத்துள்ள எம்பெருமான் நிலைகளும் ஐந்து. இந்த அமைப்பு ஒப்புமை நோக்கில் அமைந்திருக்கலாம். இக்கோபுரத்தின் வெளிச்சுற்றுப் பிரகாரப் பகுதியில் வெள்ளைக் கல்லால் ஆன சிற்பங்கள் ஏராளமாக உள்ளன. இச்சிற்பங்கள் தத்துவரீதியாகவும், கருத்தாழம் மிக்கதாகவும் காணப்படுகிறது. இங்குள்ள சிற்பங்களில் கஜேந்திர மோட்சம், அக்கினி பகவான், இந்திரன்,

குபேரன், தட்சிணாமூர்த்தி, சங்கரநாராயணர், வேணு கோபாலர், திருவிக்கிரம அவதாரம், நரசிம்ம அவதாரம் போன்ற அழகான சிற்பங்கள் காணப்படுகின்றன.

***கொடிமர மண்டபம் :*** பின் உள்ளே நுழைய கொடிமர மண்டபத்தைக் காணலாம். இக்கோவிலின் கொடிமரம் தேக்குமரத்தால் ஆனது. இக்கொடி மரத்தில் ஒவ்வொரு வருடமும் பங்குனியில் உத்திரம் நட்சத்திரத்தன்று கொடியேற்றப்படும். கொடியேற்றுவது திருவிழா தொடங்கிவிட்டது என்று மற்றவர்களுக்குத் தெரிவிப்பதற்கு ஆகும். எம்பெருமானுக்கும், நாச்சியாருக்கும் 10 நாட்கள் திருவிழா நடைபெறும்.

கொடிமரத்தின் அடிப்பகுதி உயரம் 17 அடி கல்லால் அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மேலுள்ள பகுதிகள் மரத்தால் அமைக்கப்பட்டுள்ளது. அந்த மரத்திற்கு வெளியில் தங்க மூலாம் பூசியதகடுகள் பொருத்தப்பட்டுள்ளன. கொடி மரத்திற்கு அருகில் பலிபீடம் அமைந்துள்ளது. அடுத்து மணிமண்டபம் அமைந்துள்ளது.

***மணிமண்டபம் :*** நீண்ட சதுரமான வடிவில் மணிமண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தில் பலவண்ணங்கள் தீட்டப்பட்டுள்ளன. பெரிய மணி ஒன்று தொங்க விடப்பட்டுள்ளது. இம்மணியை அன்பளிப்பாக அளித்தவர் பேரரசரான ஆதித்த வர்மன் ஆவார்.

***மகாமண்டபம் :*** மணி மண்டபத்திற்கு அடுத்தபடியாக மகாமண்டபம் அமைந்துள்ளது. இதற்கு ''குலசேகர மண்டபம்'' என்றபெயரும் உண்டு. சேர அரசன் குலசேகரன் கட்டியதால் அப்பெயர் வழங்குகிறது என்பர். திருவிழாக்காலங்களில் உற்சவர் இம் மண்டபத்தில் அமர்ந்து இருப்பார்.

***கருவறை :*** மகா மண்டபத்தை அடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. அதற்கு அடுத்தபடியாக மூலஸ்தானம் அமைந்துள்ளது. பிரதான கருவறையில் ஸ்ரீ அழகிய நம்பி மூலவராகவும், அவருக்கு அருகில் ஸ்ரீதேவி பூதேவிகள் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளனர். மூலவருக்கு இடக்கைப் பக்கம் இவரை நோக்கி பிரம்ம மார்க்கண்டேயர் என்னும் முனிவர்களும் வீற்றிருக்கின்றார்கள். மற்றும் உற்சவ மூர்த்திகளான வடிவழகிய நம்பி, ஸ்ரீதேவி, பூதேவி குறுங்குடி நாச்சியார், ஆண்டாள் ஆகியவர்களுடன் தங்க சிம்மாசனத்தில் எழுந்தருளியுள்ளனர். இங்குள் பெருமாளின் அழகு மிகவும் போற்றத்தக்கது. மூலவ மூர்த்தி கல்லாலும், அழகிய வேலைப்பாடுகளாலும் அலங்கரிக்கப்பட்டடுள்ளது. அம்மூலவர் உருவம் பல மூலிகைகள் சேர்ந்த கலவையைக்கொணடு அமைக்கப்பட்டுள்ளதால், அபிஷேகங்கள் கிடையாது. புஷ்பங்கள் சார்த்தமாட் டார்கள். ஆனால் ஆராதனங்கள், நிவேதனம் செய்தல் முதலியன நடை பெறுகின்றன.

மூலஸ்தான நம்பியை ''ஸ்ரீவைணவ நம்பி'' என்று கூறுகிறார்கள். ''இந்நம்பிகளில் ஒருவர் ''திருமண் சாத்திக் கொண்டு, பாஷ்யக்காரர் ''இராமானுஜர் பக்கத்தில் வேதாந்தம் கேட்டுச் சீடராகி நாமும் நம் ராமானுஜனை உடையோம்'' என்று கூறினாராம். அதனால் நம்பிக்கு வைணவ நம்பி என்ற திருநாமம் உண்டாயிற்று. இதற்கு அடுத்தபடியாக வீற்றிருந்த நம்பியின் கருவறையும். அதற்கு அடுத்தபடியாக பள்ளி கொண்ட நம்பியின் கருவறையும் அமைந்துள்ளன. இங்கு வீற்றிருந்த, நின்ற, கிடந்த ஆகிய மூன்று திருக்கோலங்களுடன் நம்பி எழுந்தருளி உள்ளார்.

***உட்பிரகாரம்:*** நம்பி ஆண்டவர் வீற்றிருந்த, நின்ற, கிடந்த என்ற மூன்று நிலைகளில் அமைந்துள்ள கருவறைகளைச் சுற்றி உட்பிரகாரம் அமைந்துள்ளது. இதில் கன்னிமூலையில் கன்னி விநாயகர் சிலை அமைந்துள்ளது. தெற்குப்பக்கம் குறுங்குடி நாச்சியார் சன்னிதி உள்ளது. வடபக்கத்தில் ஆண்டாள் சன்னிதியும், திருவேங்கட முடையான் சன்னதியும், தசாவதார சன்னதியும் அமைந்துள்ளன. தெற்கு உட்பிரகாரத்தில் வீற்றிருந்த நம்பியின் சன்னதிக்கு சற்று கிழக்கே நின்ற சிவன் சன்னதி அமைந்துள்ளது. பக்கம் சென்ற சிவன் சன்னதியைப் பற்றி திருமங்கையாழ்வார் தன்னுடைய பெரிய திருமொழியில்

''அங்கும் புவியினி அறனும் உடையவர்
அவறொருவர்
பக்கம் நிற்க நின்ற பண்புருவர் போலும்''

எனப்பாடி மகிழ்ந்திருக்கிறார். இவ்வமைப்பு சைவ, வைணவ ஒற்றுமையை ஏற்படுத்துவதற்காக அமைக்கப்பட்டிருக்கிறது என அறியலாம். இங்கு சிவனும் விஷ்ணுவும் இருப்பதால் ''துவீ மூர்த்தி ஸ்தலம்'' என இவ்வூர் ஸ்தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.

***கால பைரவர் சன்னதி:*** பள்ளிகொண்ட நம்பி சன்னதிக்குக் கிழக்கே கால பைரவர் சன்னதி உள்ளது.

***சேனை முதல்வர்சன்னதி:*** பள்ளி கொண்ட நம்பி சன்னதிக்கு கிழக்கே கால பைரவர் சன்னதி உள்ளது.

***சேனை முதல்வர் சன்னதி:*** பள்ளி கொண்ட நம்பி சன்னதியின் வடக்கு மூலையில் சேனை முதல்வர் சன்னதி அமைந்துள்ளது. இவர் முக்கிய தேவதைகளில் ஒருவராகப் போற்றப்படுகிறார். இவர் விஷ்ணுவிற்குரிய பரிவார தேவதை எனலாம்.

***மணவாள மாமுனிவர் சன்னதி (வீரப்ப நாயக்கர் மண்டபம்):*** நாயக்க அரசர்களில் ஒருவரான வீரப்பநாயக்கரால் இம்மண்டபம் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. இங்கு சுமார் ஆறு அடி உயர கற்சிலைகள் உள்ளன.

***கண்ணன் சன்னதி:*** மூன்றாவது பிரகாரத்தில் வட மேற்கு மூலையில் கண்ணன் சன்னதி அமைந்துள்ளது. இங்கு ஸ்ரீஜெயந்தி அன்று வழிபாடுகள் சிறப்பாக நடைபெறுகின்றது.

***திருமஞ்சனக்குளம் :*** இக்கோயிலின் வடக்குப்பக்கம் திருமஞ்சனக்குளம் ஒன்று அமைந்துள்ளது. இக்குளத்தின்மேல், தென்கிழக்கு திசையில் பனைமரம் ஒன்றும் காணப்படுகிறது. இம்மரமே இக்கோயிலின் தலவிருட்சமாகக் கொள்ளப்படுகிறது.

திருமழிசையாழ்வார்

''கரண்டமாடு பொய்கையுள் கரும்பனை
பெரும்பதம்
பண்டுவீழ வாதையாய் குறுங்குடி நெடுந்தகாய்''

எனத் திருச்சந்த விருத்தம் என்னும் பிரபந்தத்தில் பாடியுள்ளார்.

***திருவாய்மொழி மண்டபம்:*** கோயிலில் மூன்றாவது பிரகாரத்தில் திருவாய்மொழி மண்டபம் அமைந்துள்ளது. இங்கு மார்கழி மாதத்தில் 10 நாட்கள் இராப்பத்து உற்சவம் நடைபெறுகின்றது. விழாவில் நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி வைணவர்களால் அனுசந்திக்கப்பட்டு வருகிறது. ஆகவே இம்மண்டபத்திற்கு திருவாய்மொழி மண்டபம் எனப் பெயர் வந்தது.

***திரு ஜீயர் சுவாமிகள் மண்டபம்:*** இரதி மண்டபத்திற்கு தெற்குபக்கம் ஜீயர் சுவாமிகள் மடம் அமைந்துள்ளது. இம்மடத்திலேயே பேரருளாளர் ஜீயர் சுவாமிகள் வழி பட்டம் பெற்றவர்கள் தங்கிக் கோயில் பராமரிப்புப் பணியில் ஈடுபட்டு வருகிறார்கள். இம்மண்டபத்தில் தெற்குப்பகுதியில் உடையவர் சன்னதி உள்ளது. இந்த சன்னதியை ஜீயர் சுவாமிகள் மட்டும் வழிபாடு நடத்தி வழிபடுவதாகக் கூறுகிறார்கள். ஜீயர் சுவாமிகள் கிழக்குப் பார்த்தவாறு சன்னதியில் புலித்தோலில் அமர்ந்து இருக்கிறார். அழகிய நம்பி கோயிலுக்கு பெருமாளைச் சேவிக்க வருபவர்கள் காலை 10.30 மணிக்குள் ஜீயர் சுவாமிகளைப் பார்க்க வந்தால் அவர்களுக்கு தீர்த்தம் கொடுத்து ஆசீர்வாதம் செய்து அனுப்புகிறார். காலை 10.30 மணிக்கு மேல் வந்தால், அட்சதை மட்டும் போட்டு ஆசிர்வாதம் செய்கிறார். மடத்திற்குள் நுழையும்போது, மேற்குப்பகுதியில் மேலாளர் அலுவலகம் உள்ளது. அதற்கு நேர் கிழக்குப் பக்கத்தில், தோட்டத்திற்கு செல்வதற்குரிய வழி அமைந்துள்ளது.

***தோட்டம்:*** இங்குள்ள நெல்லி மரம் மிக உயர்ந்தது. மாமரம் பெரிய அளவில் உள்ளது. வாழை மரங்கள் சிறப்பாக உள்ளன. எம்பெருமானுக்குப் புஷ்பங்கள் இங்கேயே எடுத்துக் கொள்கிறார்கள்.

***மலைமேல் நம்பி:*** இத்தலத்திற்கு மேல்புறம் மகேந்திரகிரி என்றமலை காணப்படுகிறது. இம்மலைக்கு அருகிலேயே மலைமேல் நம்பி எழுந்தருளியுள்ளார். மலைமேல் நம்பியைச் சீனிவாசன் என்று அழைப்பர்.

***திருப்பாற்கடல் நம்பி:*** ஸ்ரீ அழகியநம்பி கோயிலுக்கு வரும் வழியில் திருப்பாற்கடல் நம்பி கோவில் அமைந்துள்ளது. மகேந்திர கிரியிலிருந்து ஓடி வருகின்ற ஆறானது இவ்வழியாகச் செல்கிறது. இந்த ஆற்றின் தென்கரையில் திருப்பாற்கடல் நம்பி எழுந்தருளி உள்ளார்.

திருப்பாற்கடல் நம்பி கோயிலில் 1627-ல் அன்ன தானச்சத்திரம் நிறுவி ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும், தேசாந்திரிகளுக்கும் உணவு அளிக்கப் பட்டதாகக் கல்வெட்டுச் சாசனம் கூறுகிறது.

***தல வரலாறு :*** திருக்குறுங்குடி நம்பி வராக துவதார காலத்தல் ஏற்பட்டது. இத்திருத்தலத்தில் பெருமான் பிராட்டிக்கு கைசிக புராண வரலாற்றை எடுத்துக் கூறினார் என்று சொல்லப்படுகிறது.

தென்பாண்டி நாட்டில் உள்ள 18 வைணவ தலங்களில் மிகவும் பர பாவமானது (முக்கியமானது). சுவாமி அழகிய நம்பியை 78 பிரம்மாக்கள் ஆராதனை பண்ணியதாக தலபுராணம் கூறுகின்றது. இந்த பெருமானை நான்கு ஆழ்வார்கள் மங்களா

சாசனம் செய்துள்ளானர். நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பெரியாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகிய நால்வரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். எம்பெருமான் நாராயணன் ஐந்து நிலைகளில் இங்கு உள்ளார்.

1. பரத்துவம் - மோட்சமான ஸ்ரீவைகுண்டபதி யில் எழுந்தருளியிருக்கும் நிலை

2. வியூகம் - திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக் கும் நிலை

3. விபவம் - தசாவதார நிலையில் உள்ள நிலையில்

4. அந்தரியாமித்துவம் - உலகெங்கும் பரவியுள்ள நிலை

5. அர்ச்சாவதாரம் - விக்கிரக ரூபாமாக 108 திவ்ய தேசங்களிலும் மற்றும் கோவில்களிலும் எழுந் தருளியிருக்கும் நிலை.

*புராண வரலாறு:* தலத்தின் பெருமை பிரம்மாண்ட புராணத்தில் உள்ளதாகக் கூறப்பட்டுள் ளது. இத்தலத்தில் எம்பெருமானை பிரம்மா ஆராதித் துள்ளதாகப் புராணம் கூறும். இன்றும் மறவாமல் தை மாதப் பிறப்பன்று ''பிரம்மா ஆராதனம்'' என்று இத்திருக்கோயிலில் ஆராதனை நடத்துகிறார் கள். தேவர்களும், ரிஷிகளும் இங்குள்ள நம்பியை வணங்கியதாகக் கூறுவர்.

*பூஜைகள்:* இத்திருக்கோயிலில் வைகானச ஆகம முறைப்படி நித்திய பூசைகள் நடைபெறு கின்றன.

*விழாக்கள்:* சித்திரை மாதம் பத்துநாட்கள் வசந்த உற்சவவிழா சிறப்பாக நடைபெறும். வைகாசி மாதம் விசாகம் 10 நாட்கள் நடைபெறும். ஆனி மாதம் பெரியாழ்வார் உற்சவம், ஆடிமாதம் ஆண் டாள் உற்சவமும் நடைபெறுகிறது. கருட உற்சவம் புரட்டாசி மாதம் நான்கு சனிக்கிழமைகளில் நடை பெறுகின்றன. ஐப்பசி மாதம் ஊஞ்சல் நடைபெறு கிறது. பகல்பத்து, இராப்பத்து உற்சவமும் நடை பெறுகிறது. மார்கழி மாதம் எண்ணெய் காப்பு உற்ச வம் நடைபெறுகிறது. திருப்பங்குனி உற்சவம் பெரிய விழா என்று அழைக்கப்படுகிறது. பங்குனி உத்திரத் தில் கொடியேறி 11 நாட்கள் நடைபெறும் திருவிழா பிரமோற்சவ விழா ஆகும்.



*ஊர்ச் சிறப்பு:* சன்னதி தெரு மிக நீளமானது அகலமானது மட்டுமல்ல ஆலயமே மேட்டுப்பகுதி யில் அமைந்துள்ளது. நம்பியாறு வளைந்து வளைந்து ஓடுவது கைபுனைந்து ஏற்றாக் கவின்பெறு வனப்பை உடையது. இந்த ஊர்க்காரர்கள் கொடுத்து வைத்த வர்கள். கடுங்கோடையிலும் நம்பி ஆற்றில் தண்ணீர் ஓடும். குடிநீர்க்கும் குளிருக்கு பஞ்சமே இல்லை.

*நிறைவு:* திருமங்கை ஆழ்வார் இத்தலத் தில் தங்கி இருந்து கோயிலுக்கு வேண்டிய திருப் பணிகளை செய்திருக்கிறார். திருக்குறுங்குடி நம்பி கோவில் சைவ, வைணவர்களிடையே ஒற்றுமையை வளர்க்கும் சமுதாய நிலையமாக அமைந்துள்ளது.

''நம்பியைத் தென்குறுங்குடி நின்ற அச்
செம்பொனே திகழும் திருமூர்த்தியை
நம்பர் வளவர் ஆதியஞ்சோதியை
எம்பிரானை என்சொல்லி மறப்பனோ''

- நம்மாழ்வார்.

★★★

# கந்தர் அநுபூதி

**- திருப்புகழ்மாமணி மு. அருணகிரி**

இன்னுமொரு பாடல் - ''மெய்யேயென வெவ் வினை வாழ்வை உகந்து''. உலகில் மக்கள் பெரும் பாலும் இவ்வாழ்க்கையே நிரந்தரம் என எண்ணி இறைவனால் கொடுக்கப்பட்ட ஆயுள்நாளில் கல்வி செல்வத்தால் ஆன்றோர்களின் உரைகளை கற்றுண ராது புறவாழ்க்கையையே விஞ்ஞானத்தால் வகுத்துக் கொண்டதுபோல் அகவாழ்க்கையில் ஈடுபட்டு வாழ வழிவகுத்துக் கொள்ள தவறிவிட்டனர். ஒருவன் புகைவண்டியில் இருக்கையோடு படுக்க நல்ல மெத்தை கொண்ட முதல் வகுப்பில் பிரயாணம் செய்யும்போது அதே வண்டியில் பிரயாணம் செய் யும் மற்றுமுள்ள நண்பர்களிடம் பேசிவிட்டு இரவு வந்ததும் தன் படுக்கையில் சென்று படுத்து தூங்கு கிறான். அதனால் வசதியாயுள்ளது என்று அதி லேயே இருந்து விடுவானா?'' இருந்தாலும் அதி காரிகள் இருக்கத்தான் விடுவார்களா? எந்த ஊருக்கு போக பயணச்சீட்டை வாங்கியுள்ளானோ அதுவரை யில் தன் பயணம் முடிந்ததும் அவன் இறங்க வேண் டும், இறங்கும்போது ''ஐயோ இந்த சுகமான முதல் வகுப்பை விட்டு இறங்க வேண்டி இருக்கிறதே?'' என்று வருந்தமாட்டான், அவ்வாறே முன் செய்த வினைப்பயனால் வந்த வாழ்வில் அந்த தேகம் உள்ளவரை நேர்மையாகவும் அன்பாகவும் நடந்து எந்த சமயத்திலும் இந்த தேகத்தையும் இதனோடு சார்ந்த சுகதுக்கங்களையும் விட்டு விட சித்தமாக இருக்க வேண்டும். நிலைபேறுடையதாக கருதி மகிழ்ந்து உழலாமல் மனத்தை ஒருநிலைப்படுத்தி வாழ தயாராகப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண் டும். இதற்கு ஒரு பழமொழியும் உண்டு.'' எண்ணை உள்ளவரை தீபம், வினை உள்ள வரை தேகம்'' என்பதாகும்.

இன்னொரு பாடல்:

''கூகாஎன என் கிளை கூடி அழப்போகாவகை''.

இந்த அழியக்கூடிய உடம்பாகிய வீட்டில் நாம் வாழும் போதே இறப்பு எனும் வேதனையால் அவதியுறாவண்ணம், இறைவன் எழுந்தருளி வந்து காப்பாற்ற வேண்டும். அவ்விதம் வேண்டிக் கொண் டது, கந்தரலங்காரம்.

''தெய்வத்திருமலை செங்கோட்டில் வாழும்
செழுஞ்சுடரே''

எனும் பாடலில், அங்ஙனம் செய்தால் உனை மறக்க மாட்டேன். இந்த உடலை எப்படி வளர்த்து காப் பாற்றினாலும் நிச்சயம் ஒரு நாளைக்கு அழிந்து விடும் என்பதை அறிவிக்கவே இந்த அல்லலை நீக்கி நான் உடலை உதறிவிட வேண்டும் என இறைவனிடம் வேண்டிக் கொள்கிறார். அதனால் ''உனது கருணையை நான் என்றும் மறவேன். கூகா என அழும் என் சுற்றத்தாரும் ஏனையோரும் அழாது, போகா வகையை எனக்கு அருள வேண்டும்'' என்பதே இப்பாடலின் கருத்து. இதனைக்குறித்து பட்டினத்தடிகள் வாழ் நாளில் நிகழ்ந் ததை உங்களுக்கு இது சமயம் நினைவுப் படுத்துவது சாலப் பொருந்தும் என நினைக்கிறேன்.

ஒரு மரணவீட்டில் எல்லோரும் இறந்தவரை சுற்றி அழுது கொண்டிருந்ததைப் பார்த்து பட்டினத் தடிகளும் அவர்களோடு சேர்ந்து அழுதார். இது அங் குள்ளோருக்கு வினோதமாக இருந்தது. உறவினர்கள் இவரைப் பார்த்து நீங்கள் ஏன் அழுகிறீர்கள் எனக் கேட்டதற்கு, பட்டினத்தார் நான் இறந்தவருக்காக அழவில்லை, இவ்வளவு அறிவீனர்களாக நீங்கள் இருப்பது குறித்து உங்களுக்காக அழுகிறேன். செத்த பிணத்திற்காகச் சாகபோகும் பிணங்கள் அழுவது மூடத்தனம் அல்லவா? அழுகிற உங்களுக்கு மட்டும் சாவு இல்லையா? ஜனனம் - மரணம் என்பது நிகழ்ச்சிகளாகும். துக்கம், ஆனந்தம், இன்பம், துன் பம் என்பது அதன் அனுபவம். மரணம் என்பது தற்காலிகமானது, அது உடம்பும் உயிரும் பிரிந்து போகும் நிலை.

எது அழிவற்ற ஒன்றோ அதுவே மெய்ப் பொருள், சத்தியமாகிய மெய்பொருளைத் தேடு வதே வாழ்வின் நோக்கமாக இருக்க வேண்டும். மரணம் எனும் சம்பவத்தை சம்பவமாகப் பாராது அதன் உண்மை என்ன என்று தேட ஆரம்பித்தால் மெய்ப்பொருள் பிறக்கும். இதைத்தான் அருணகிரி யார் தமது பாடலில் மெய்ப்பொருள் அறியும் திறனை இறைவன் அளிக்க வேண்டும் எனக் கூறி உள்ளார். சாவுக்கு அழுவது என்று வைத்துக் கொண்டால், எத்தனை பேருக்கு அழுவது, அப்படி அழுவதால்தான் என்ன பயன். இறந்தவர் உடனே எழுந்து விடுவாரா? அப்படியே உயிரோடு வந்தால் தான் நமக்கு என்ன நன்மை விளையப்போகிறது. ஆகவே நன்கு ஆராய்ந்து மெய்ப்பொருளை நாடி பத்தியும் ஞானமும் பரவிடும் மார்க்கங்களை அனு

தினமும் உணர்ந்து, கண்மலராலும், மனமலராலும் கைம்மலராலும் துதி செய்து வருவோமாக.

மற்றுமொரு பாடல் :

''கார்மாமிசை காலன்வரில் கலபத்தேர்மாமிசை வந்து எதிரப்படுவாய்''

மாணவன் விடியற்காலையில் எழுந்து படிக்க நினைத்து காலை 5 மணிக்கே கடிகாரத்தில் அதாவது அலாரம் முள்ளைத்தள்ளி வைக்கிறான். தான் இரவு 10 மணிக்கு படுக்கைக்கு போகும் முன், கடிகாரத்தில் உள்ள முள்ளை காலை 5 மணிக்கு பொருத்தி வைக்கிறான். அப்போது அலாரம் அடிப்பதற்கு முன்னால் இரவு 10 மணிக்கு ஏன் திருப்பி வைக்க வேண்டும் என்று நாம் கேட்கலாமா? அவனுக்கு காலை 5 மணிக்கு அலாரம் அடிக்க வேண்டுமானால் தூங்கப் போகும் தருணத்தில் கடிகார முள்ளை முன் கூட்டியே பொருத்தி வைக்க வேண்டுமென்று அவன் விரும்புவதை, முள்ளை பொருத்தி அமைத்ததிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். அப்படியே எப்போதோ வரும் காலனை முன்கூட்டியே (அப்போதே) நினைத்துத் தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆதலால் காலனை மட்டும் அறிந்திருந்தால் மட்டும் போதாது. காலனது கொடுமையும் மற்றும் மேலான காலகாலனையும் உடன் நினைக்கச் செய்யவே கடிகாரத்தில் அலாரம் ஒலிக்கும் முள்ளை பொருத்தி வைப்பது போல் நம் முன்னோர்கள், வாழ்நாளில் தேவாரம் திருப்புகழ் போன்ற முள்ளை முன் கூட்டியே மனதாகிய கடிகாரத்தில் பொருத்தி வைக்க வழிகாட்டியுள்ளார்கள். காலத்தை எல்லோருக்கும் உணர்த்த சூரியன் பயன்பட்டாலும் அவனது மகன் எமனோ வரப்போகும் காலத்தை யாவர்க்கும் தெரிவிப்பதில்லை. ஆகையால் முருகனுடைய கையில் உள்ள வேலாயுதம் உதவ, 3 கரணங்களாலும் சீலத்தை மெள்ளத் தெளிந்தறிவார் சிவயோகிகளே காலத்தை வென்றிருப்பார்'' என கந்தர் அலங்காரப் பாடல் ஒன்றில் அறிவுறுத்தி உள்ளதைக் கவனிக்கலாம்.

சிவபெருமானே மணிவாசகருக்கு குருவாக காட்சியளித்ததும், நாயன்மார்களை எமனது பிடிக்கு ஆளாகாது வலிய காட்சிதந்து ஆட்கொண்டதும், மெய்ப்பொருளை நாடி வாழ்ந்ததேயாகும். இவைகள் புராண வாயிலாக கேட்டறிந்த போதிலும், அண்மையில் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளையும் முருகப்பிரான் அந்த மறலியிடம், நமக்கு உகந்த மனிதன் - நமது அன்பன் என மொழிந்து ஏனையோர்போல் மண்ணிலே இறைவாமல் இயற்கைக்கு மாறாக விண்ணிலேயே அஞ்சல் என வலிய வந்து ஆட்கொண்டார். அன்னார் இறுதி மூச்சு வரை திருப்புகழின்மேல் கொண்டிருந்த மெய்ப்பொருளின் ரகசியமேயாகும். இச்செய்தி இன்றைய விஞ்ஞான உலகிலும் சரி மெய்ஞ்ஞான மார்க்கத்திலும் சரி, கேட்டிராத ஒரு அற்புத நிகழ்ச்சியாகும்.

★★★

## மனிதன்? யார்

நாம் பிறக்கும் பொழுது எதையும் கொண்டு வருவதில்லை! நாம் இறக்கும் பொழுதும் எதையும் கொண்டுசெல்வதில்லை! எனவே ஜாதிமத பேதமின்றி மனிதாபிமானத்துடன் வாழ்பவனே மனிதன்! என்பதை நினைவில்கொண்டு நாம் வாழுகின்ற காலத்தில் மக்களுக்கு நல்லதை செய்தும், நல்லதை சொல்லியும், நல்லதைக் கேட்டும் வாழ்வோமாக!

★ அன்புள்ளம் கொண்டு மக்களுக்குச் செய்யும் தொண்டில் இறைவனைக் காண்பவனே **... மனிதன்!**

★ தாய், தந்தை, தொழில் அல்லது கல்வி கற்பிக்கும் குரு, உற்றார் உறவினருடன், அன்பு, பண்பு, பாசம், பிறருக்கு உதவும் மனப்பான்மை, மேலும் நம்மிடம் பணிபுரியும் தொழிலாளர்களை கூட நண்பர்களாக மதிக்கும் குணம் கொண்டு வாழ்பவனே **... மனிதன்!**

★ நாள்தோறும் 5 நிமிடம் தியானம், 5 நிமிடம் மூச்சுபயிற்சியும் 20 நிமிடம் உடற்பயிற்சியும், என நேரத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டு, வயதுக்கு ஏற்ற உணவு, உழைப்பிற்கு ஏற்ற உணவையும் உண்டு வாழ்பவனே **... மனிதன்!**

★ பெற்றோர், மனைவி மற்றும் குழந்தைகளுடன், நல்லகருத்துகளை கூறி கலந்துரையாடல் செய்து மகிழ்வோடு வாழ்பவனே **... மனிதன்!**

★ வணிகத்தில் நல்ல தரமான பொருட்களை நியாயமான விலையில் விற்பனை செய்து அன்பான உபசரிப்புடன் நம்பிக்கை, நாணயத்துடன் வாழ்பவனே **... மனிதன்!**

இவ்வாறு நாம் நமது வாழ்வை ஒழுங்குமுறைப்படுத்தி முறையாக வாழ்ந்து வருவோமானால் நமக்கு துன்பங்கள் விலகி இறைவன் அருள் பெற்று நலமுடன் வளமாக வாழலாம்.

**- சிவத்திரு வி.என்.சி. குமார், பவானி**

# சிதம்பர ரகசியம்

- கவிஞர் சொ.பொ. சொக்கலிங்கம்






ஒருகால் ஊன்றி,
மறுகால் தூக்கி,
இருகால் பாரம்,
ஒருகால் தாங்க,
அரும்பெரும் அண்டங்கள்,
அசைந்துவரும் ஆகாய,
அருவத்தின் உருவமாய்,
ஆடினான் நடனமே; (1)

ஆடுகின்ற உருவோடும்,
அசைகின்ற ஒலியோடும்,
கூடுகின்ற அண்டங்கள்
கூடிவர ஒன்றோடு,
ஆடுகின்ற ஈர்ப்பினிலே,
அசைந்துஅவை சுற்றுகின்ற,
நாடுகின்ற பிரபஞ்ச,
நடனமெலாம் ரகசியமே; (2)

திரையிட்டு மறைத்தாலும்,
திறந்தாலும் ஆகாயம்;
திரைக்குப்பின் ஆகாயம்,
தெரிந்தாலும் ரகசியமாய்,
மறைகூறும் உண்மைகளால்,
மனந்தெளிந்தால் ஆகாயம்,
மறைந்துவிடும் மனத்திரையில்
மகேசனும் ஆகாயம்; (3)

உயிருக்கும், காற்றுக்கும்,
உருவுண்டோ? ஆகாயம்
உயிரொக்கும், காற்றொக்கும்;
உருவின்றி, எல்லையின்றி,
பயின்றுவரும் மூச்சொக்கும்;
பரமசிவன் நடனத்தில்,
உயிர்தழைக்கும் ஒலிபிறக்க,
ஒளிசிறக்கும் ரகசியமே. (4)

★★★

# நவக்கிரகத் தலங்கள், பலன்கள், வழிப்பாதை

- எம். இராஜமாணிக்கம், பவானி.

| நவகிரக ஸ்தலங்கள் | கிடைக்கும் பலன்கள் | திருநள்ளாற்றிலிருந்து | தூரம் |
|---|---|---|---|
| 1. சூரியன் (சூரியனார் கோவில்) | கண் நலம், உடல் நலம், ஆயுள் விருத்தி | மயிலாடுதுறை ஆடுதுறை அருகில் | 60 கி.மீ. |
| 2. சந்திரன் (திங்களூர்) | மன மகிழ்ச்சி, அழகு, ஆனந்தம் | கும்பகோணம் - தஞ்சாவூர் திருவையாறு பஸ் வழி | 95 கி.மீ. |
| 3. செவ்வாய் (வைத்தீஸ்வரன் கோவில்) | தைரியம், பேச்சாற்றல் வழக்குகளில் வெற்றி | பூம்புகார் அருகில் மயிலாடுதுறை, சீர்காழி | 55 கி.மீ. |
| 4. புதன் (திருவெண்காடு) | அறிவு வளர்ச்சி | பூம்புகார் அருகில் மயிலாடுதுறை, சீர்காழி | 45 கி.மீ. |
| 5. குரு (ஆலங்குடி) | நல்வாழ்க்கை நல்ல சக்தி, புகழ் | கும்பகோணம் வலங்கைமான் நீடாமங்கலம் பஸ் வழி. | 80 கி.மீ. |
| 6. சுக்கிரன் (கஞ்சனூர்) | நல்ல மனைவி, திருமகள் கடாக்ஷம், திறமை | காவிரிவடகரையில் மயிலாடுதுறை, கதிராமங்கலம் | 60 கி.மீ. |
| 7. சனி (திருநள்ளாறு) | நோய், வறுமை, சிரமங்கள், நீங்குதல், ஆயுள் விருத்தி | காரைக்காலிலிருந்து கும்பகோணம் பஸ் வழி | 5 கி. மீ. |
| 8. இராகு (திருநாகேஸ்வரம்) | பலஹீனம், ஆகாசம், விஷ ஜந்துக்களால் தொல்லை இராது | கும்பகோணம் பஸ் வழி. | 50 கி.மீ. |
| 9. கேது (கீழ்ப்பெரும்பள்ளம்) | ஞானம், உடல்நலம், வெற்றி | பூம்புகார் அருகில் | 48 கி.மீ. |



குன்றத்தூரில் தெய்வச் சேக்கிழார் விழா 21.5.2001 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. அறநிலையத் துறையின் கூடுதல் ஆணையாளர் திருமிகு எஸ். கனகையா, பி.எஸ்.சி., பி.எல். அவர்களின் தலைமையில் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தொண்டை மண்டல ஆதீனம் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம், ''திருக்கோயில்'' இதழாசிரியர் முனைவர் த. அமிர்தலிங்கம் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் பங்குகொண்டனர். சென்னை இணை ஆணையாளர் திருமிகு இரா. சுப்பிரமணியன், பி.ஏ.பி.எல். அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். காஞ்சிபுரம் உதவி ஆணையாளர் திருமிகு பி. வாசுநாதன், எம்.ஏ., பி.எல்., சேக்கிழார் சுவாமி திருக்கோயில் செயல் அலுவலர் திரு இரா. ரகுநாதன் ஆகியோர் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்து இருந்தார்கள்.






குன்றத்தூரில் தெய்வச் சேக்கிழார் விழா 21.5.2001 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. அறநிலையத் துறையின் கூடுதல் ஆணையாளர் திருமிகு எஸ். கனகையா, பி.எஸ்.சி., பி.எல். அவர்களின் தலைமையில் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தொண்டை மண்டல ஆதீனம் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம், ''திருக்கோயில்'' இதழாசிரியர் முனைவர் த. அமிர்தலிங்கம் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் பங்குகொண்டனர். சென்னை இணை ஆணையாளர் திருமிகு இரா. சுப்பிரமணியன், பி.ஏ.பி.எல். அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். காஞ்சிபுரம் உதவி ஆணையாளர் திருமிகு பி. வாசுநாதன், எம்.ஏ., பி.எல்., சேக்கிழார் சுவாமி திருக்கோயில் செயல் அலுவலர் திரு இரா. ரகுநாதன் ஆகியோர் விழா ஏற்பாடுகள்ளச் சிறப்புறச் செய்து இருந்தார்கள்.

பதிவு எண். T.N/CHIEF PMG/515/2001/WPP 283



குன்றத்தூரில் தெய்வச் சேக்கிழார் விழா 21.5.2001 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. அறநிலையத் துறையின் கூடுதல் ஆணையாளர் திருமிகு எஸ். கனகையா, பி.எஸ்.சி., பி.எல். அவர்களின் தலைமையில் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தொண்டை மண்டல ஆதீனம் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம், ''திருக்கோயில்'' இதழாசிரியர் முனைவர் த. அமிர்தலிங்கம் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் பங்குகொண்டனர். சென்னை இணை ஆணையாளர் திருமிகு இரா. சுப்பிரமணியன், பி.ஏ.பி.எல். அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். காஞ்சிபுரம் உதவி ஆணையாளர் திருமிகு பி. வாசுநாதன், எம்.ஏ., பி.எல்., சேக்கிழார் சுவாமி திருக்கோயில் செயல் அலுவலர் திரு இரா. ரகுநாதன் ஆகியோர் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்து இருந்தார்கள்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ.பி.எச்.டி.,
அச்சிட்டோர் : **பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,** 142, ஜானி ஜான் கான் தெரு, சென்னை - 600 014.